தேசிய வாழ்க்கை வரலாற்று வரிசை

# கபீர்

பாரஸ்நாத் திவாரி

தமிழாக்கம்:
டி. ஆர் பஞ்சாபகேசன்



நேஷனல் புக டிரஸ்ட், இந்தியா

ISBN 978-81-237-2802-5

முதற் பதிப்பு 1972
மறு பதிப்புகள் 1999, 2010 (சக 1932)

Kabir (*Tamil*)

ரூ. **25.00**

வெளியீடு: இயக்குநர், நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா
நேரு பவன், 5 இன்ஸ்டிடியூஷனல் ஏரியா, பேஸ்-II
வஸந்த் குஞ்ச், புதுதில்லி - 110070

# முன்னுரை

தனிச் சிறப்புடன் திகழ்ந்த தகவோர் பலரை, வாழ்க்கையின் ஒவ்வொரு துறையிலும் தொன்று தொட்டே இந்நாடு தோற்றுவித்து வந்திருக்கிறது. கலையிலும், இலக்கியத்திலும், அரசியலிலும், அறிவியலிலும், ஆன்மீகத்திலும் இன்னபிற துறைகளிலும், செயற்கரிய செய்த பெரியார்களின் பெயர்கள் நம் வரலாற்றை வளப்படுத்துகின்றன. வீட்டுப் பேச்சு வழக்கிலேயே வந்துவிட்ட சில பெயர்கள் உள்ளன. பலருடைய பெயர்கள் பொதுமக்களுக்குத் தெரிந்திருந்தாலும், அவர்களுடைய வாழ்க்கையையும் பணியையும் பற்றி ஒன்றும் தெரிந்திராது. வியத்தகு சாதனைகள் செய்துள்ள வேறு பலர் பற்றிச் சாதாரண மக்கள் அநேகமாக ஒன்றுமே தெரியாத நிலையில் உள்ளனர்.

ஒரு நாட்டின் வரலாறு பெருமளவிற்கு, அதன் பெரியார்களின் – ஆண்களின் பெண்களின் – வரலாறேயாகும். நாட்டை உருவாக்கிச் சமைத்தவர்கள் அவர்கள். நம் நாடு எப்படி உருவாயிற்று என அறிய, ஒவ்வொரு சாதாரணக் குடிமகனும் இப்பெரியார்களைப் பற்றிச் சிறிதாவது அறிந்திருப்பது அவசியம்.

சரித்திர இடைக்காலத்தில் சமய, சமூகப் பரிணாமங்களைத் தோற்றுவித்த மகான்களாகிய அடியார்களிலும், சீர்திருத்தவாதிகளிலும் சாலச் சிறந்தோரில் கபீரும் ஒருவர். மெய்ஞ்ஞானியான அவர், சடங்குச் சழக்குகளை உறுதியாக எதிர்ப்பவராக விளங்கினார். சடங்குகளிலும் சம்பிரதாயங்களிலும் உள்ள பாசாங்குகளையும் பகட்டையும் அம்பலப் படுத்தி, அவற்றை உடைத்தெறிந்தார். இந்துக்களுக்கும் முஸ்லீம்களுக்கும் இடையே பாலமாய் விளங்கிய அவர், அந்தப் புரட்சிச் சகாப்தத்தின் புகழ்மிகு பக்தர்களில் ஒருவர். அவருடைய சிந்தனையும் வாக்குகளும் அநேகமாக நாடெங்கும் ஊடுருவி, சமயச் சீர்திருத்தத்திற்கு உதவின.

டாக்டர் பாரஸ்நாத் திவாரி, கபீரை ஆழ்ந்த பற்றுடன் ஆய்ந்திருப்பவர். கபீரின் வாழ்க்கை பற்றியும் படைப்புகள் பற்றியும் நிறைய ஆராய்ச்சி செய்திருக்கிறார். நேஷனல் புக் டிரஸ்ட் வெளியிடும் 'தேசிய வாழ்க்கை வரலாற்று வரிசை'க்காக இந்நூலை ஆக்கியுள்ளார். கபீரின் வாழ்க்கையையும் பணியையும் சுருக்கமான எளிய முறையில் தரும் நூலிது.

*பி.வி. கேஸ்கர்*

சுமார் ஐநூற்று ஐம்பது ஆண்டுகள் முன்னால், காசி நகரத்து நெசவாளியான நீரு என்பானும் நீமா என்னும் அவனது மனைவியும், லஹர்தாரா என்னுமிடத்தில் ஒரு அழகிய குழந்தையைக் கண்டெடுத்தார்கள். அப்பொழுதுதான் மணமாகியிருந்த அவர்களுக்கு என்ன செய்வதெனத் திகைப்பாயிருந்தது. அழகான குழந்தையை விட்டுச் செல்லவும் மனமில்லை. எடுத்துச் சென்றால் மற்றவர்கள் என்ன சொல்வார் களோ என்று கவலையாகவும் இருந்தது. தம்பதிகளிடையே வாக்குவாதம் நடந்தது. வீண்வம்பு எதற்கென நீரு புத்தி சொல்ல, தாய்மை உணர்ச்சியால் உந்தப்பட்ட நீமாவோ, எடுத்து வளர்க்கலாம் என மன்றாடினாள். கடைசியில் பெண்ணின் சொல்தான் வெற்றி பெற்றது என்று சொல்ல வேண்டியதில்லை.

காசி நகரில் கபீர் சௌரா என இப்போது அழைக்கப்படும் இடத்தில் - சிலர் நீருதல்லா என்றும் சொல்வர் - நீரு வசித்ததாய் நம்பப்படுகிறது. இருவரும் குழந்தையுடன் அங்கு சென்றார்கள். மழலைக்குப் பெயர் சூட்ட மதகுரு ஒருவர் அழைக்கப்பட்டார். திருக்குர்ஆனில் ஒரு பெயர் தேடிய அவருக்கு, திரும்பத் திரும்ப கடவுளுக்கு உரிய அரபு மொழி நாமங்களே கண்ணுக்குப் புலப்பட்டன. கபீர், குப்ரா, அக்பர், இன்ன பிற. இன்னொரு மதகுரு அழைக்கப்பட்டார். இவரும் அதையே கண்டார். குழம்பிய குருமார், குடும்ப நாசம் ஏதாவது நேராமல் தவிர்க்கக் குழந்தையைக் கொன்று விடுவதே நல்லெதன நீருவிடம் கூறினார்களாம். குருவின் ஆணைக்குப் பணிந்து நீரு குழந்தையைக் கொன்றிட வாளை ஓங்கியபோது ஒன்றும் நடக்கவில்லை என ஒரு கதை கூறுகிறது. இந்தக் கதையை நம்புவது கஷ்டமாயிருக்கலாம். எப்படியிருந்தாலும் பச்சிளங் குழந்தையைக் கொல்ல நீருவிற்கும் நீமாவிற்கும் மனம் வரவில்லை என்பது நிச்சயம். கடைசியில் கபீர் என்றே குழந்தைக்குப் பெயரிட்டார்கள்.

கபீர் பிறந்த தேதியை உறுதியாய் நிர்ணயிப்பது கடினமாக உள்ளது. இது சம்பந்தமாக வெகு பிரபலமான ஒரு நாட்டுப்

பாடல் உண்டு. ஆனால் அதை இயற்றியவர் யார் என்றும், எவ்வளவு தூரம் அதை நம்பலாம் என்றும் தெரியவில்லை. விக்ரம சகாப்தத்தில் 1455-வது ஆண்டு (கி.பி. 1398) கடந்த பிறகு ஜ்யேஷ்ட (ஆனி) மாதம் பௌர்ணமி திங்கட்கிழமையன்று கபீர் அவதரித்ததாய் அது கூறும். அன்றே வட சாவித்திரி என்னும் பண்டிகையும் வந்ததாம். கபீர் மார்க்கத்தினர் இன்றும் ஒவ்வொரு ஆண்டும் வட சாவித்திரி நாளன்று கபீர் பிறந்த நாளைக் கொண்டாடுகிறார்கள். ஆனி பௌர்ணமி, திங்கட் கிழமையில், 1455-ல் அன்றி 1456-ல்தான் நிகழ்ந்திருக்க முடியும் என வேறு சிலர் கூறுவர். எனவே '1455 கடந்த பிறகு' என பாட்டு கூறினால், 1456ஐயே அது குறிப்பிடுகிறது என்பர். எனினும், இந்துப் பஞ்சாங்கப்படி 1455 ஆம் ஆண்டில் ஆனிப் பௌர்ணமி ஒரு திங்கட் கிழமையில் நிகழவே செய்தது. இன்னும் சிலர், கபீர் வாழ்க்கையுடன் தொடர்புள்ளதாகக் கருதப்படும் சில நிகழ்ச்சிகளைச் சரிக்கட்டும் பொருட்டு மேலும் 25, 30 வருடம் பின்னால் பிறந்த தேதியைக் கொண்டு செல்வர்.

கபீரின் பிறப்பு பற்றியும் பல கதைகள் உண்டு. ஒரு கதை பின்வருமாறு: வேதியன் ஒருவன் தன் விதவை மகளுடன் சுவாமி இராமானந்தரைத் தரிசிக்கச் சென்றான். வணங்கிய பெண்ணின் கைம்மையை அறியாத அடிகள் "சத்புத்திரன் பெறுவாய்" என அருளி விட்டார். அடியார் சொல் வீண் போமோ? உரிய காலத்தில் கைம்பெண் ஒரு மகனைப் பெற்று விட்டாள். பழிக்கு அஞ்சி, லஹர்தராவில் குளத்தில் போட்டு விட்டாள் குழந்தையை. சிலர் இந்தக் கதையில் கொஞ்சம் அற்புதத் தன்மையைச் சேர்க்க விரும்புவர். அவர்கள் கூற்றுப்படி, வாழ்த்தப்பட்டவள் விதவை என்று பெரியவர் அறிந்தவுடன், "மகளே, நான் சொன்னது மாறாது. ஆனால் உன் பெயர் மாசுறாது. உன் மகன் மாமுனிவனாய் விளங்குவான்" என்றார். பிறகு அப்பெண்ணின் கையில் கொப்புளம் ஒன்று தோன்றி, அது பெரிதாகிக் கொண்டே போய்க் கடைசியில் வெடித்தது, சதைப்பிண்டம் ஒன்று அதிலிருந்து வெளிப்பட்டதாம். உடனே பிண்டம் ஒரு பிள்ளையுமாகி விட்டது. இந்தக் கதையின்படி கபீரின் நிஜப்பெயர் 'கரவீரன்' அதாவது கரத்திலே பிறந்தவன் என்று கூறப்படும். கபீர் ஒரு பெண்ணிற்குப் பிறந்தவர் அல்லர் என நிறுவுவது இக்கதையின் நோக்கமாகும்.

இன்னொரு கதை இன்னும் சுவையானது. ஒரு சமயம் மகாவிஷ்ணு லட்சுமியுடன் சல்லாபித்துக் கொண்டிருந்தபோது,

தேவியிடம் ஒரு வார்த்தை சொல்லாமல் திடீரென எங்கோ புறப்பட்டுப் போய்விட்டாராம். சிறிது நேரம் கழித்துத் திரும்பிய அவர் இன்னலுற்ற பக்தன் ஒருவன் தம்மை அழைத்ததால், தாம் உடனே செல்ல வேண்டியதாயிற்று என்று ஊடல் கொண்ட தேவியிடம் விளக்கினார். தன்னை விடவா பெரிய பக்தன் என அன்னை வினவினாள். "எத்தனையோ பேர் உண்டு. தொண்டன் அழைத்தால், எல்லாவற்றையும் விட்டு விட்டு நான் ஓடவேண்டும்" என பகவான் கூறினார். இந்த வாக்குவாதத் திற்குக் காரணமான பக்தனையே சோதித்து விடுவதென்று லட்சுமி தீர்மானித்தாள். அந்த பக்தர் வேறு யாருமல்ல. சுவாமி இராமானந்தர்தான். லட்சுமி ஒரு தோட்டக்காரி போல் உருக் கொண்டு, இராமானந்தர் செல்லும் வழியில் ஒரு மலர்ச் சோலையை மாயையால் சிருஷ்டித்தாள். வழியிலேயே பூவைக் கண்ட பக்தர் இறைவனுக்கு ஆகும் என்றெண்ணி இரண்டொரு பூவைக் கொய்ய முற்படுமுன், "என்ன அய்யா, பூவைத் திருடுகிறீர்" என லட்சுமி மறித்தாள். உடனே அவர் கொய்த பூக்களை அவள் மீது வீசிவிட்டுத் தம் வழி சென்றார். பக்தனைக் கையும் களவுமாய்ப் பிடித்த திருப்தியுடன் வைகுந்தம் திரும்பிய லட்சுமி, பக்தன் திருடிய பூக்களைப் பகவானுக்குக் காட்டு வதற்குச் சேலை மடிப்பில் தேடினாள். என்ன ஆச்சரியம். பூவிருந்த இடத்தில் பூப்போல் ஒரு மகவு இருந்தது. "என்ன இது?" என வியப்புற்றவர் போல விஷ்ணுவும் வினவினார். லட்சுமி தன் தோல்வியை ஒப்புக்கொள்ள, விஷ்ணு "ஆனது ஆயிற்று, கண்ட இடத்திலேயே இந்தச் சிசுவை வைத்துவிடு. என் பரம பக்தனாய் அவன் விளங்குவான்" என்றார். லட்சுமியும் லஹர்தாரா குளத்தில் ஒரு தாமரை இலை மீது குழவியை விட்டு வந்தாள். அந்தக் குழந்தையே கபீர்.

மூன்றாவது கதை, கபீர் சுக முனிவரின் அவதாரம் என்கிறது. "மாந்தர் உய்ய பூமியில் பிறப்பாய்" என பரமசிவன் அவரைப் பணித்ததாகக் கூறுப்படுகிறது. முன்பே பன்னிரண் டாண்டு கர்ப்பவாசம் அனுபவித்த சுகபகவான், மறுபடியும் கருவடையும் குழி வேண்டாம் என முடிவு செய்து, தம்மை ஒரு சிசு ஆக்கிக்கொண்டு சிப்பி ஒன்றில் மூடிக்கொண்டார். கங்கையில் விடப்பட்ட சிப்பி, ஆற்றோட்டத்தில் மேற்சொன்ன பொய்கைக்கு வந்து ஒரு தாமரை இலை மீது தங்கியது. சிப்பி திறந்து வெளிப்பட்ட சிசுதான் கபீர் என்பர்.

புராணக்கதைக் கற்பனை அபரிமிதமாய்க் காணும் இது

போன்ற கதைகள், கபீரின் மறைவுக்குப் பிறகே பரவத் துவங்கியிருக்கும். லட்சுமியும், சுகமுனிவரும் சம்பந்தப்பட்ட கதைகள் முற்றிலும் புராண வழியில் உள்ளன; ஆனால் முதல் கதையில் கொஞ்சம் உண்மை இருக்கலாம். எனினும் கபீர் மார்க்கத்தினர் இது போன்ற கதைகள் எதையும் நம்புவதில்லை. கபீர் கருவில் பிறந்தவரே அல்லர், சத்புருஷனும் பரமாத்மாவின் அம்சமுமாகிய அவர், பிறப்பு இறப்பு அற்றவர், தேவை நேரும் போது தாமே தோன்றுவார் என்றே அவர்கள் நம்புகிறார்கள். முந்தைய மூன்று யுகங்களில் பதின்மூன்று முறை கபீர் அவதரித் திருக்கிறார். பதினான்காவது முறையாகக் கலியுகத்தில் சத்புருஷனின் திவ்ய ஒளி, விக்ரம சகாப்தம் 1455ஆம் ஆண்டு ஆனித் திங்கள் மதி நிறைந்த நன்னாளில், காசியம்பதியருகே லஹர்தாரா தடாகத்தில் இறங்கியது. அது சமயம் கார்முகில் சூழ்ந்த வானிலிருந்து சிறு தூற்றல் போட்டுக் கொண்டிருந்தது. அவ்வப்போது மின்னல் மின்னியது. வண்டினம் முரலும் சோலையில் வண்ண மலர்கள் பூத்துக் குலுங்கின. அப்போது அஷ்டானந்த வைஷ்ணவர் என்பவர் குளக்கரையில் இருந்தார். கோடி சூர்யப் பிரகாசம் கொண்ட திருவொளியைக் காண அவருக்குக் கண் கூசியது. தம்முடைய குருவாகிய சுவாமி இராமனந்தரிடம் சென்று இந்த அற்புதத்தைச் சொன்னார். “உனக்குக் காணக்கிடைத்த இந்த அருட்பெருஞ்சோதி பற்றிப் பின்னர் நீ நிறைய அறிவாய். அவன் திருநாமம் அவனியெல் லாம் ஒலிக்கும்” என்று ஆசான் கூறினார். அந்தத் திவ்விய ஒளியே ஒரு குழந்தையாகித் தாமரை இலை ஒன்றில் எழுந்தருளியது. அதையே நீரு கண்டனன்.

கபீர் மார்க்கத்தினரின் கிரந்தங்கள், நீருவும் நீமாவும் முன்னொரு பிறவியில் தோட்டிகளாய் இருந்ததாகவும் கூறுகின்றன. சுதர்சனன் என்ற மகாபக்தனை மகனாய்ப் பெற்றதால் இவர்கள் மறு பிறவியில் அந்தணர் குலத்தில் பிறந்து நரஹரி, லச்சிமா என்ற பெயர்களுடன் சந்த்வார் என்னும் ஊரில் இல்லறம் நடத்தி வந்தனர். அவர்களுடைய கடவுள் பக்தி காரணமாக கபீர் அவர்களுடைய வீட்டில் அவதரித்தார். ஆனால் அஞ்ஞானத்தால் அவர்கள் அவரைப் புரிந்து கொள்ளாமையால் அவர் மறைந்துவிட்டார். இந்தச் சோகத்தால் உயிர் நீத்த இருவரும் திரும்பவும் காசியில் நீரு, நீமா என்ற பெயர்களுடன் நெசவாளர் குலத்தில் பிறந்தனர். பிறகு கதை பழையபடி செல்கிறது. ஒரு வேற்றுமை என்னவென்றால்,

நாமகரண சமயத்தில் காஜி குழந்தையைக் கொன்றுவிடும்படி கட்டளையிட்டபோது, கத்தியை நீரு ஓங்கியவுடன் கபீர் பின்வரும் பதத்தைப் பாடியதாய்க் கூறப்படுகிறது:

அறியா இடத்தேயிருந்து வந்தேன்
அறிந்தாரில்லை என்றன் மர்மம்

1. பிறவியும் கருவா சமதும் இல்லேன், பாலக உருவில் வந்தேன், காசி நகரத்துக் காட்டில் இருந்தேன், சேணியன் என்னைக் கண்டான்.

2. விண்ணுக்கும் மண்ணுக்கும் அப்பாற்பட்டவன் அகமன், அபாரன் நானே, ஒளியே உருவாம் மாசிலா தேவன், அதுவே என்னுடைய நாமம்.

3. உருவில் உருவே தரித்தே வந்தேன், உடலைக் கபீரன் என்றார், முன்னைப் பிறவியில் கொடுத்தேன் வாக்கு, உன்றன் வீட்டில் வந்தேன்.

4. ஊன் என்ப, உதிரம் என்பவை அற்றேன், உலகென் பெயரே ஓதும், அபயம் அளித்துக் கரையில் சேர்ப்பேன், அழிவிலி கபீரன் நானே.

இங்கு வரும் முன்பிறவி பற்றி முன்பே கூறப்பட்டுள்ளது. சத்திய, திரேதா, துவாபர யுகங்களில் முறையே சதசுக்ருதர், மனீந்திரர், கருணாமயர் என்ற பெயர்களில் கபீர் அவதரித்தார் என கபீர் வழியினர் நம்புகிறார்கள். பக்தியையே ஆதாரமாய்க் கொண்ட இதுபோன்ற நம்பிக்கைகள் பற்றி அதிகமாய்க் கேள்வி கேட்பது கூடாது. நம்பிக்கையாலும் எவ்வளவோ காரியங்கள் நடந்திருக்கின்றன. எனினும் பக்தியால் கற்பனை வெகுதூரம் ஓடி விடுவதும் உண்டு. இந்தக் கதைகளில், பகுத்தறிவு ஒப்புக் கொள்வதற்குக் கடினமானதாக நிறைய உள்ளது.

எல்லாக் கதைகளையும் சேர்த்துப் பார்த்தால், கபீரின் பெற்றோர் பற்றியோ, பிறப்பிடம் பற்றியோ உறுதியாக ஒன்றும் சொல்ல முடியாது என்ற முடிவுக்கே வரவேண்டியுள்ளது. லஹர் தாரா என்னும் இடம் பல கதைகளில் குறிப்பிடப்படுகிறது. இதையும் அவர் பிறப்பிடமாக அனைவரும் ஏற்பதில்லை. ஆஜம்கர் ஜில்லாவில் பேல்ஹரா கிராமத்திலேயே அவர் பிறந்தார் என்றும் இந்தப் பெயர்தான் பேச்சு வழக்கில் லஹர்தாரா எனத் திரிந்துவிட்டது என்றும் சிலர் கூறுவர். ஆனால் ஆராய்ச்சிகள் மூலம், இந்த பேல்ஹரா எங்கு இருந்தது, ஆஜம்கரிலிருந்து காசிக்கருகே எப்படி வந்துற்றது என்பதெல்லாம்

புலப்படவில்லை, வேறு சிலர் மக்ஹர் என்னுமிடத்தில்தான் கபீர் பிறந்து, மறைவும் உற்றார் என்பர். கீழ்வரும் கபீர் வாக்கை அதற்குச் சான்றாகவும் கூறுவர்:

கண்டேன் முதலில் உலகை மஉஅரில்,
காசியில் பின்னர் வசிக்க வந்தேன்.

இங்கும் ஒரு பெரிய கஷ்டம், பல பதங்களும் ஈரடிகளும் கபீர் இயற்றியவையல்ல, இடைச் செருகல்கள் என்பதாகும். எனவே அவற்றை அகச் சான்றுகளாய்க் கொள்வது கடினம். காசியில் வசித்த நீரு, நீமா என்னும் நெசவாளித் தம்பதியால் கபீர் வளர்க்கப்பட்டார் என்று மட்டுமே உறுதியாகக் கூறலாம்.

கபீரின் பாலபருவம் பற்றியும் இப்படிப் பல கதைகள் உள்ளன. ஊட்டம் ஒன்றும் இல்லாமலே அவர் உடம்பு வளர்ந்த தாகக் கூறப்படுகிறது. பையன் ஒன்றும் சாப்பிடவில்லையே என வருந்திய வளர்ப்புப் பெற்றோரைத் திருப்திப் படுத்துவதற் காக அவர் பால் மூட்டும் அருந்த இசைந்தார். அந்தப் பாலும் அற்புதமான விதத்தில் வரும். இன்னும் கன்று ஈனாத ஒரு இளம் பசுவின் மடிக்குக் கீழே மண்பானை ஒன்று வைக்கப் படும். கபீர் நோக்கினவுடன் பசு மடியிலிருந்து பாலமுதம் சுரந்து பானை நிரம்பி விடும். இதையே அவர் அருந்துவார்.

இஸ்லாமிய நெசவாளிக் குடும்பத்தில் வளர்ந்த கபீர், இராமன், கோவிந்தன், ஹரி என்னும் இறைவன் நாமங்களைக் கூறுவதில் இன்பம் கண்டார். அந்தச் சமயத்தில் ஆண்டு வந்த முஸ்லீம் மன்னன், மிகுந்த ஆசாரப் பற்று காரணமாக சகிப்புத் தன்மையற்றவனாயிருந்தான். மதத்தின் பெயரில் கொடுமை செய்யப்படுவது வழக்கமாயிருந்தது. எனவே இரு பிரதான வகுப்புகளுக்கிடையே, அன்பு இன்றி வெறுப்பே அதிகமாக இருந்தது. ‘ராம ராம’ என கபீர் செபிப்பது அவர் குடும்பத் தினருக்குப் பிடிக்கவில்லை. “கபீர் காஃபிர் (நாத்திகன்) ஆக வளர்ந்திடுவான்” என முஸ்லீம்கள் கூறினார்கள். இதற்குக் கபீரின் மறுமொழி, ‘பிறர் சொத்தை அபகரிப்பவனும் வெளி வேடத்தால் உலகை ஏய்ப்பவனும், வாயில்லாச் சீவன்களை வதை செய்பவனுமே காஃபிர்’ என்பதாகும். இதைக் கூறும் கபீரின் பதங்கள் பல உள்ளன, அவை மெய்யாகவே கபீர் வாக்குகள் என்றே தோன்றுகிறது. முஸ்லீம்களிடையே வளர்ந்ததால் முதலில் முஸ்லீம்தளை அவர் குறை கூறினார். ஒரு பதத்தில் அவர், கொடிய வழியை விட்டு இராமனைப் பூஜிப்பாய் என்று காஜிக்கு அறிவுரை கூறுகிறார்.

பண்டைநூல் விட்டுப் பூஜிப்பாய் இராமனை.
கொடியதுபுரியும் மதியிலா வெறியோய்
கண்டு கொண்டாய் இராமன் நாமம். கபீரைத்
தடுப்பர் துருக்கர் வீணே.

வேத புராணங்களையும் கபீர் இவ்வாறே அப்பட்டமாகத் தாக்கினார். அவருடை இராமன், இந்துக்களின் இராமன் அல்லன். இறைவனுக்கு இராமன் என்னும் நாமத்தையே அவர் நேசித்தார்.

குழந்தையாயிருக்கும்போதே கபீர் இராமாயணத்தில் மெய் மறந்துவிடுவார். தம் குலத்து நெசவுத் தொழிலையும் அடிக்கடி மறந்துவிடுவார். அன்னை நீமா, இந்த உதவாக்கரைப் பையன் எப்படி உருப்படப் போகிறான் என ஏங்குவாள். நெய்யப் புகுந்தால் ஐயன் பெயர் மறந்து விடுகிறதே என கபீர் விளக்கு வார். ஆனால், கவலைப்பட வேண்டாம், மூவுலகையும் காப்பவன் நமது யோகக்ஷேமத்தையும் கவனித்துக் கொள்வான் என ஆறுதல் கூறுவார்.

ஊடும் பாவும் கபீரன் துறந்தான்
உடலில் இராமன் பெயரே வரைந்தான்
வருந்தியழுவாள் கபீரின் அன்னை.
இறைவா, பாலன் வாழ்க்கை ஏதோ.
தாயே தறியில் நூலைக் கோத்தால்
நாயகன் பெயரை நானே மறப்பேன்.
கபீரன் உரையைக் கேட்பாய் தாயே
மூவுலகீசன் காப்பான் நம்மை.

இறைவனின் இந்துப் பெயர்களைக் கபீர் நேசித்ததால் முஸ்லீம்கள் வருந்தினர் என்றால், அவருடைய இராமன் இந்துக் களின் இராமன் அல்ல என்பதால் இந்துக்களும் நொந்தனர். உருவ வழிபாடு, தீண்டாமை முதலிய இந்துப் பழக்கங்களைக் கபீர் கடுமையாய்ச் சாடினார்.

எனினும் வெளித் தோற்றத்தில் கபீர் வைஷ்ணவ பக்தர் போல் வாழ்ந்தார். இதனால் அந்தணர் சினந்தனர். முஸ்லீம் குலத்தவன் வைணவ ஆசாரங்களைப் பின்பற்றுவது கூடாது எனக் கருதினர். குருவிடம் உபதேசம் பெறாதவன் முக்தியடைய முடியாது என்ற நம்பிக்கை இருப்பதால், 'உன்னை எந்த வைணவ குரு சீடனாய் ஏற்றார்?' என வேதியர் அவரை வினவினர். கபீர் மனம் நொந்தார். அந்தக் காலத்தின்

பரமபகதரான சுவாமி இராமானந்தர் காசியில் வசித்து வந்தார் என்று கூறப்படுகிறது. அவரிடம் தீட்சை பெறலாம் என்று கபீர் எண்ணினார். ஆனால் வைணவ ஆசாரியர் முஸ்லீம் நெசவாளிக்குத் தீட்சை கொடுப்பாரா? கபீர் ஒரு யுக்தி செய்தார். வைகறைப் பொழுதில் சுவாமிகள் கங்காஸ்நானம் செய்யச் செல்வது வழக்கம். ஒரு நாள் கபீர் அவர் செல்லும் வழியில் நின்று கொண்டார். 'ராம ராம' என்று உச்சரித்துக்கொண்டே வந்த இராமானந்தர் கபீரைக் கடந்து சென்றார். இதையே குருவிடமிருந்து கிடைத்த ராமநாம உபதேசமாக கபீர் எடுத்துக் கொண்டு விட்டார். வீடு திரும்பினார். துளசிமாலை அணிந்தார். இராமானந்த அடிகளார் தம்மைச் சீடராய் ஏற்றுக்கொண்டு விட்டதாகக் கூறினார். அன்றைய தினம் கருக்கலின் இருட்டில் அடிகளாரின் பாதுகை கபீரின் மீது தவறிப் பட்டு விட்டது என்றும், உடனே அவர் 'ஹே ராமா' என்று சொல்ல, இதைக் கபீர் தமக்களிக்கப்பட்ட மந்திர உபதேசமாகக் கொண்டார் என்றும் சிலர் கூறுவதுண்டு.

நெற்றியில் சந்தனமும் (வடநாட்டு வைணவர் வழக்கம்) கழுத்தில் துளசிமாலையுமாகத் துலங்கும் கபீரைப் பார்த்து, குலத்தைக் கெடுக்கவந்த குழந்தையைக் கண்டெடுத்தோமே என நீருவும் நீமாவும் வருந்தினர். இந்துக்களோ, ஒரு முஸ்லீமுக்கு இராமானந்தர் வைணவ தீட்சை எப்படி அளிக்கலாயிற்று என்று குமைந்தார்கள். செய்தி அடிகளின் செவிக்கெட்டியது. தமக்குத் தெரிந்து இதுமாதிரி ஒன்றும் செய்யவில்லையே என திகைத்த அவர், கபீரைக் கூப்பிட்டு அனுப்பினார். கபீரும் வந்தார். அது சமயம் இராமானந்தர் திரையிட்டு மூடிய ஒரு இடத்தில் இறை பூஜையில் ஈடுபட்டிருந்தார். பூஜைக்கு எல்லா சாமக்கிரியைகளும் இருந்தும், ஒரு பொருள் இல்லாமையால் வழிபாடு நிறைவுறவில்லை. திரைக்கு வெளியேயிருந்தே கபீர், "சுவாமி, பெருமானுக்குத் துளசிபத்திரம் அர்ச்சிக்கவில்லையோ", என உரக்கக் கூறினார். வியப்புற்றார் இராமானந்தர். ஆனால் வினவலுற்றார், "நீ என் சீடன் என்று கூறித் திரிகிறாயாமே, எப்போது உன்னைச் சீடனாய் ஏற்றேன்?" நடந்த கதையைக் கபீர் கூறியதும், "குருசிஷ்ய உறவு ஏற்படும் முறை இதுவன்றே?" என்றார் குருநாதர். கபீர் கேட்பார், "ஆசார்யரே, வேத சாஸ்திரங்களில் எல்லாம் இராமநாமத்தைவிடப் பெரிதும் உண்டோ?" "வேதசாத்திரங்களில் மெய்ப்பொருளாவது நாதன் நாமம் ராமாவே. அதைவிடப் பெரிதேது?" என்றார் இராமானந்தர்.

“பின் ஆசார்யப்பெருமானே, இதைவிட என்ன பெரிய இரகசியத்தைத் தாங்கள் சீடர்களுக்கு உபதேசிக்கிறீர்கள்?” என்று கபீர் கேட்டவுடன் இராமானந்தர் பரமானந்தமடைந்து, திரையை விலக்கி கபீருக்குத் தரிசனமளித்து அவரைச் சீடராக ஏற்றார்.

குருவுக்கு மிஞ்சிய அறிவைக் கபீர் பல முறை காட்டிய தாகக் கூறப்படுகிறது. இதைக்குறிக்கும் பல சுவையான கதைகள் உண்டு. அவற்றில் ஒன்று வருமாறு:

ஒருகால் பித்ரு சிரார்த்தத்துக்கென சுவாமிகளுக்குப் பசும்பால் தேவைப்பட்டது. பால் கொண்டுவரும்படி கபீரைப் பணித்தார். கபீர் சென்று, ஒரு செத்த பசுவுக்கருகே பாத்திரத்தை வைத்து, பசுவின் முன்னால் பசும்புல்லைப் பிடுங்கிப் போட்டு விட்டுக் காத்திருந்தார். பல நாழிகையாகியும் பால் வரக்காணாத இராமானந்தர், சேதியறிந்து வர வேறு சீடர்களை ஏவினார். அவர்கள் சென்று பார்த்து கபீரின் வினோதச் செயலை வந்து சொன்னார்கள். அவர் கபீரை அழைத்து விளக்கம் கேட்டார். “சுவாமிஜி, செத்த பித்ருக்களுக்குச் செத்த பசுவின் பால்தான் உத்தமம் என நினைத்தேன். ஆனால் இந்த மாடு புல்லையே தின்னக்காணோம். பாலைப்பற்றி என்ன சொல்ல?” என்றார் கபீர். “எங்காவது செத்த மாடு புல் தின்னுமா?” என்று கேட்டார் குரு. உடனே கபீர், “இப்போது செத்த மாடு புல் தின்னாது என்றால், எப்போதோ பல்லாண்டுகள் முன் செத்த உங்கள் மூதாதையர் நீங்கள் அளிக்கும் பாலை எப்படி அருந்துவர்?” என்றார். சுவாமிஜியால் மறு மொழி கூற முடியவில்லை.

இந்தக் கதையின் உண்மை எப்படியிருந்தாலும் கபீர் பற்றி மக்களுக்கு என்ன எண்ணமிருந்தது என்பதை அது காட்டவே செய்கிறது. அவருடைய தர்க்கவாதம் தனிப்பட்டதாயிருந்தது. நகைத்திறன் கத்தி போல் கூர்மையானது. அவருடைய பாடல் களில், சம்பிரதாயத்துக்குக் கட்டுப்படாத, அனாயசமான, இந்த அறிவுக் கூர்மை மின்னுவதைக் காணலாம். இந்து மதம், இஸ்லாம் ஆகிய இரண்டிலும் ஊடுருவியிருந்த வெளிவேடத் தன்மையை அம்பலப்படுத்துவதற்குத் தம் அறிவுக் கூர்மை யையும் நகைத்திறனையும் அவர் பயன்படுத்தினார். இன்னொரு கதை வருமாறு:

இரு பிராமணர்கள் தர்க்க வாதத்தில் ஈடுபட்டிருந்தார்கள். ஒருவர் கடவுள் ஒன்றேயென்றார். மற்றவர் இரண்டென்றார். இருவரும் கபீரின் கருத்தைக் கேட்டார்கள். அவர்கள்

வாதத்தைப் பொறுமையுடன் கேட்ட அவர், "கடவுள் கறுப்பா, வெளுப்பா, பச்சையா, மஞ்சளா?" என வினவினார். "நிற மற்றவன்" என்றார்கள். கடவுளின் அளவு, வடிவம், பற்றிக் கபீர் கேட்டார். "உருவும் அளவும் இல்லான்" என்றார்கள். பிறகு கபீர் "நல்லோரே, நிறமும் உருவும் அளவும் இல்லாதவன், எண்ணக்கூடியவனாய் எப்படி இருப்பான்? அவன் ஒன்றுமல்ல, இரண்டுமல்ல - அனைத்திலும் உள்ளான்" என்றார்.

இக்கதையும் பின்னர் கட்டப்பட்டதாய் இருக்கலாம். ஆனால் கபீர் எப்படிப்பட்டவர் என்பதை இது காட்டுகிறது. ஒரு பதத்தில் அவர் சொல்வார்:

பிணக்கொன்று தீர்ப்பாய் ராமா
தொண்டர்பால் கருணை உண்டேல்.
பிரமன் பெரியனா, அவனையும் படைத்தவனா,
வேதம் பெரியதா, அதற்கும் மூலமதா?

மனமே பெரியதா, மனமது எண்ணுவதா,
ராமன் பெரியனா, அவனை யறிந்தவனா?
கபீரன் சொல்வான், பெரிதும் குழம்பினேன்,
அரியவன் பெரியனா, அரியின் தொண்டனா?

கபீர் வழியினர் மட்டுமின்றி மற்றவர் கூட, இராமானந்தரே கபீரின் குருவென ஒப்புக் கொள்கிறார்கள். ஆனால் இதில் காலக் கணக்கு இடருகிறது. விக்ரம ஆண்டு 1467இல் சுவாமி இறந்தார். 1455-இல் பிறந்த கபீருக்கு அப்போது 12 வயதுதான் இருக்கும். குருவிடம் அவர் இதற்கு மூன்று நான்கு ஆண்டு களுக்கு முன் தீட்சை பெற்றார் என்றால், ஏழேட்டு வயதுச் சிறுவனாகவே இருந்திருப்பார். அவ்வளவு இளம் வயதில் தீட்சை பெற்றார் என நம்ப இடமில்லை. இதனால்தான் சிலர் கபீரின் பிறப்பை இன்னும் பல ஆண்டுகள் பின்னுக்குத் தள்ளுகிறார்கள். இது எவ்வளவு சரியோ தெரியாது.

கபீர் பிறப்பு பற்றிய, பெரும்பாலான கதைகளில் எல்லாம் இராமானந்தர் பெயர் வருவதைக் காண்கிறோம். வடக்கே அந்தக் காலத்து மிகப் பெரிய முனிவர் இராமானந்தர் என்பது உண்மையானாலும், அவர்தான் கபீரின் குரு என்று நிறுவுவதற்கு இது போதாது. ஐயமறக் கபீரின் வாக்கு எனக் கருதப்படக்கூடிய பாடல்களில் இராமானந்தர் பற்றி ஒரு குறிப்புக் கூட இல்லை. அவருடைய எல்லாப் படைப்புகளிலும், ஒரே ஒரு பதத்தில், மதிசுந்தரர் என்னும் முனிவர் பெயர் காணப்படுகிறது. அதன்

தொடக்கவரிகள் வருமாறு:

மதியை இழந்தேன் பதியை மறந்தேன், கதியும் என்னமோ?
மஞ்சக் களிப்பில் மூடின கண்கள்,
யாரிடமும் சொல்வேனோ?

கடைசி வரிகள்:

தருணம் இதுவே சிந்தித்திடுவாய், மதி சுந்தரனே நீ கபீரன்
சொல்லாமல் இராமன் பெயரில் இன்புற்றிருப்பாயே.

மதிசுந்தரன் என்பது ஒருவர் பெயராயிருக்கலாம். அல்லது மதியழகனே (நன்மதியோனே) எனப் பொதுவாய் விளிக்கப் படுவதாகவும் பொருள் கொள்ளலாம். மதி சுந்தரர் என்னும் பக்தரால் இயற்றப்பட்டவை எனத் தோன்றும் சில பதங்கள் உள்ளன. ஆனால் இவர்தான் கபீரால் குறிப்பிடப்பட்டவரா என உறுதியாய் அறிய வழியில்லை.

மஹா பக்தராகிய கபீர் கிரகஸ்தராயும் வாழ்ந்தார். வீட்டுப் பொறுப்புக்களைத் துறக்காமலே பக்தனாய் வாழலாம் என்பது அவர் உறுதி. அவருடைய சொந்தப் பாடல்களும் அவர் வாழ்க்கை பற்றிய கதைகளும் இதை மெய்ப்பிக்கின்றன.

அனந்ததாசர் என்னும் பக்தர், 'கபீர் சாஹப் கீ பரிச்சய்' (கபீர் அவர்களின் பரிச்சயம்) என்னும் பெயரில் கி.பி. 1645இல் கபீரின் வாழ்க்கைச் சரிதத்தை எழுதினார். கபீர் நெசவுத் தொழிலை நடத்தி வந்ததாக அவர் கூறுகிறார். துணி நெய்து, சந்தையில் விற்றுக் குடும்பத்தைக் காப்பாற்றியதுடன், அடியார் களுக்கும் உணவளித்து வந்தார். ஒரு நாள் சந்தையில் ஓர் ஏழைப் பிராமணன் அவரைக் கண்டு, உடம்பை மூடிக்கொள்ள ஒரு துணி யாசித்தான். தாம் நெய்த துணியில் பாதியைத் தர கபீர் முற்பட்டார். அவனோ முழுத்துணியையும் கேட்டான். அவன் வறுமை கண்டிறங்கிய கபீரும் முழுத் துணியையும் கொடுத்தார் குடும்பத்தின் இரவுச் சாப்பாட்டிற்கு வழி இல்லாமல் போயிற்று. கையில் காசில்லாமல் வீடு திரும்ப மனமில்லாததால், எங்கோ சென்று விட்டார். வீட்டார் கலங்கினர். மூன்று நாள் பட்டினி யால் வாடினார். பிறகு ஒரு அற்புதம் நிகழ்ந்தது. ஒரு ஆள் ஒரு மாட்டின் மீது உணவுப் பொருள்களை ஏற்றி வந்து கபீர் வீட்டில் இறக்கினான். நீமா மலைத்தாள். தன் பையனின் குணம் அவளுக்குத் தெரியும். இலட்சம் ரூபாய் தானமாய்க் கொடுத் தாலும், உழைக்காமல் ஒரு காசு கை நீட்டி வாங்கமாட்டான். ஆனால் அந்த ஆள் விளக்குவான்: "அம்மா, ஒரு ராஜா காசி

யாத்திரை வந்திருக்கிறார். உங்கள் மகன் மகிமையால் பெரிதும் மகிழ்ந்த அரசர் அவருக்கு நிறைய நிதியை தானம் செய்ய விரும்பினர். உங்கள் மகன் தானம் பெற மறுத்துவிட்டார். பிறகு அரசர் கெஞ்சிக் கேட்டுக் கொண்டதன் பேரில், ஏதோ சிறிது பண்டங்களை வீட்டில் சேர்ப்பிக்க இசைந்தார்." இப்படிக் கூறிவிட்டு அந்த ஆள் மறைந்தான். கபீருக்கும் இந்தச் செய்தி எட்டியது. தாயினும் சாலப் பரிந்து உணவூட்டும் இறைவன் திருவருளை நினைத்து உருகினார். அவனே காப்பான் என்ற நம்பிக்கை மேலும் வலுத்தது. தறியை மறந்தார். தலைவன் தாளே நினைவானார். தொண்டர்களுக்குப் பேருண்டி ஒன்று வைத்து, கையில் இருந்ததையெல்லாம் தீர்த்துவிட்டார்.

இதைக் கண்டு காசிவாசி பிராமணர்களும், சன்னியாசிகளும் பொறாமையால் எரிந்தார்கள். எப்படியாவது இந்த ஆளின் மூக்கை அறுத்து ஊரைவிட்டே விரட்டவேண்டும் என்று திட்டமிட்டார்கள். பெருங்கும்பலாய்ச் சேர்ந்து கபீரின் எளிய குடிலின் முன்னே குழுமினார்கள். கபீர் அவர்களைப் பணிவுடன் வரவேற்று, 'ஏழையின் குடிசைக்கு எழுந்தருளிய காரணம் ஏதோ' என வினவினார். "ஊரைவிட்டு ஓடு" என்று எல்லாரும் கத்தினார்கள். "நான் யாரைக் கெடுத்தேன், யாரை இகழ்ந்தேன்? இராமன் நாமம் செபித்து என் வழி செல்வதன்றி வேறறியேனே!" என்றார் தாசர். "நீ சூத்திரர்களை அழைத்து விருந்து வைத்தாய். எங்களைப்பற்றி நினைத்தாயில்லை. இப்போது எங்கள் அனைவருக்கும் விருந்து வை. இன்றேல் ஊரை விட்டு ஓடு" என்றார்கள் வந்தவர்கள். கபீருக்குச் சங்கடமாய்ப் போயிற்று. வீட்டில் ஒரு மணி தானியம் கிடையாது. சாமான் வாங்கி வரும் சாக்கில் வீட்டை விட்டுப் போய் விட்டார்.

மீண்டும் ஓர் அற்புதம் நிகழ்ந்தது. சில நூல்களில் கேசவ பன்ஜாரா என்று பெயர் கூறப்படும் ஒரு மனிதர், நிறைய ஆட்களின் தலையில் கோதுமை மாவும், அரிசியும், சர்க்கரையும், வேறு சாமான்களும் ஏற்றி வைத்துக்கொண்டு கபீர் வீட்டுக்கு வந்தார். ஒவ்வொரு பிராமணனுக்கும் இரண்டரை சேர் சாமான்களும், கூட வெற்றிலை பாக்கும் கொடுத்து, "போய்வாருங்கள்" என அனுப்பி வைத்தார் அவர். பிராமணர்கள் பரம திருப்தியுற்று, கபீரைப் போற்றிக் கொண்டே சென்றார்கள். "கபீரைத் தூற்றுவோன் தொலையா நரகில் உழல்வான்" என்று பேசிக் கொண்டார்கள்.

பிறகு பகவானே பிராமண உருக்கொண்டு, கபீர் ஒளிந்து கொண்டிருந்த இடத்துக்குச் சென்று, "கபீர் வீட்டில் பிராமணர் களுக்குப் பெரிய தானம் நடக்கிறதே? இதோ பார், நான் வாங்கி வந்திருப்பதை! நீயும் போயேன்" என்றார். வீடு சென்ற கபீர் அது உண்மையென்றறிந்தார். அவருக்குப் பேச நாவெழவில்லை "துன்பங்களிலிருந்து காக்கும் என் பிரான் பெரியன்," என்று கசிந்துருகினார்.

இந்தக் கதையும் மெய்யாக நடந்ததை மிகைப்படுத்தியதாய் இருக்கலாம். எனினும் தன் குடும்பத்தின் நலனுக்காக, முக்கிய மாக தொண்டர்களின் நலனுக்காக அவர் கவலைப்பட்டார் என்பதையும், அவர்கள் இன்னல்களைக் குறைக்க இயன்ற தெல்லாம் செய்தார் என்பதையும் இது காட்டுகிறது.

கபீரின் பெருமை பரவப் பரவ, அவர் வீட்டுக்கு மக்கள் கூட்டம் கூட்டமாய் வரத் துவங்கினர். கடவுளுடன் அவர் ஒன்றுவதற்கு நேரம் கிடைப்பது அரிதாயிற்று. இதிலிருந்து தப்ப அவர் ஓர் உபாயம் செய்தார். ஒரு நாள் ஒரு வேசியின் வீட்டுக்குச் சென்று, அவள் தோளில் கையைப் போட்டுக் கொண்டு அவளுடன் வீதியில் திரிந்தார். பூசையில் இறைவன் திருவடி கழுவிய பாதோதகத்தை ஒரு குவளையில் வைத்துக் கொண்டு மது போல் அருந்தலானார். ஊரார் பழித்தனர். "பக்தனாய் வாழ்வது எளிதோ? பத்து நாள் வாழ்ந்து பார்த்தான் கபீர். கேவலம் நெசவாளிதானே. புத்தியைக் காட்டிவிட்டான்" என்றெல்லாம் எள்ளி நகையாடினர். வேசி சமேதராய் கபீர் உள்ளூர் அரசனின் தர்பாருக்கே சென்றுவிட்டார். வழக்கமாய் அவரைப் பயபக்தியுடன் வரவேற்று அரியாசனத்திற்கு அருகே சரியாசனம் கொடுக்கும் அரசன், அன்று அவர் கோலத்தை கண்டு பதைத்து, அவைக்கு வெளியிலேயே அவர் நின்றிட ஆணையிட்டான். பரம பக்தன் ஒருவன் இப்படி பாதகன் ஆவானா என அவையோர் திகைத்தனர்.

அப்போது கபீர் திடீரென ஒரு காரியம் செய்தார். ஒரு குவளையிலிருந்து கொஞ்சம் தண்ணீர் எடுத்துத் தரையில் தெளித்தார். இதென்னவென்று அருகிலிருந்தோர் விளக்கம் கேட்டார்கள். புரி க்ஷேத்திரத்தில் ஜகந்நாதர் ஆலய அர்ச்சகர் ஒருவருக்குத் தீப்புண் பட்டு விட்டதென்றும், அதைக் குணப் படுத்தவே இந்த நீர் என்றும் கபீர் விளக்கினார். அரசன் அந்த நேரத்தைக் குறித்துக்கொண்டு, புரி சென்று உண்மை அறிந்து வர ஆள் ஒருவனை அனுப்பினான். கபீர் வீடு திரும்பினார்.

அரசு தூதுவன் புரி நகரம் அடையப் பத்து நாளாயிற்று. அங்கு விசாரித்ததில் மெய்யாகவே அர்ச்சகர் ஒருவருக்கு, திருவமுது சமைக்கையில் தீப்புண் பட்டதென்றும், கபீர் தெளித்த நீரால் அது ஆறியது என்றும் அவன் அறிந்தான். அதை நம்பமுடியாத அவன், "காசிவாசி கபீரையா சொல்கிறீர்கள், நிச்சயமா?" என்று கேட்டான். "அதே கபீர்தான், அவர் தினமும் ஜகந்நாத தரிசனத்திற்காகப் புரி வருவதும் உண்டு" என்ற மறுமொழியால் மேலும் வியப்புற்றான் காசிக்காரன். ஊர் திரும்பி அரசனிடம் கதையைச் சொன்னான். பெரியாரைப் பழித்தோமே என பரிதவித்த அரசன் பிராயச்சித்தம் செய்ய எண்ணினான். பாவ பரிகாரமாகத் தானம் கொடுக்கலாம் என்றால், கபீர் வாங்க மாட்டார். பெரியாரிடம் குற்ற மன்னிப்பு யாசிப்பதற்கு, தலையில் விறகுக் கட்டு போட்டுக் கொண்டு செல்வது, அந்தக் காலத்தில் ஒரு வழக்கம். அதே போல அவனும் சுமந்து கொண்டு தன் பரிவாரங்களுடன் கபீர் வீட்டுக்குச் சென்றான். ஆளும் அரசனை அந்தக் கோலத்தில் கண்ட கபீர் சொல்வார்: "ஐயனே, மெய்யாகவே நீ மேலோன். மேலோரே மெய் பொய் பேதங்களை அறிய வல்லார். நீர் வந்தது, என்னையும் மேம்படுத்தவே." இவ்வண்ணம், கபீர் தம் குணங்களை மறைக்க முயல முயல, குன்றின் மேலிட்ட விளக்காய் அவற்றின் ஒளி உலகெல்லாம் பரவலாயிற்று.

புரி அர்ச்சகர் பற்றிய கதையில் புனைவு கொஞ்சம் அதிகமாய்த் தோன்றலாம். ஆனால் பக்தர்கள் வாழ்க்கையில் அற்புதங்கள் அசாதாரணமானவை அல்ல. காரிகைக் கதை நம்பக் கூடியதாகவே இருக்கிறது. சம்பிரதாயத்தை அசட்டை செய்யும் கபீரின் இயல்பிற்கு ஒத்ததாக அது உள்ளது. கபீர் மார்க்கத்தினரின் பெரும்பாலான நூல்களில் இந்த இரு நிகழ்ச்சிகளுமே காணப்படவில்லை. எனினும், தர்மதாஸ் தம் 'சப்தாவளி'யில் விலை மகளுடன் கபீர் வீதி உலா வருவதைக் குறிப்பிடவே செய்கிறார்.

கபீர் புகழ் மேலும் மேலும் பரவியதால் பொறாமையால் கருகிய பிராமணச் சாஸ்திரிமாரும் முஸ்லீம் காஜிகளும், அவரை எப்படியாவது அவமானப்படுத்த சமயம் தேடிக் கொண்டிருந் தார்கள். ஒரு சந்தர்ப்பமும் வந்தது. லோதி வம்சத்து தில்லி பாதுஷாவான சிக்கந்தர் ஷா காசிக்கு வந்தான். அவன் தீராத வெப்ப நோய் ஒன்றினால் தவித்துக் கொண்டிருந்தான். சமஸ்தான ஹகீம்களும் வைத்தியர்களும் எவ்வளவோ மருந்து

கொடுத்தும் ஒரு பயனும் கிட்டவில்லை. சுவாமி இராமானந்தரும் கபீரும் நோய் தீர்க்கும் அற்புதச் சக்தி உள்ளவர்கள் எனக் கேள்விப்பட்டு அவன் காசிக்கு வந்ததாய்க் கூறப்படுகிறது. வந்தவுடன் சுவாமியை அவன் பார்க்கச் சென்றான். ஆனால் அவரோ மிலேச்சரைப் பார்ப்பதில்லை என ஒரு விதி வைத்துக் கொண்டிருந்தார். ஏமாற்றத்துடன் மன்னன் கபீரிடம் சென்றான் அவரைக் கண்டவுடன் அவன் நோய் அகன்றது. கபீரின் காலில் விழுந்தான். சுவாமி இராமானந்தரை இனி சென்று பார்க்கும் படி அவனை அவர் பணித்தார்.

கபீரின் வேண்டுகோளுக்கிசைந்து சுவாமியும் பாதுஷாவிற்குத் தரிசனம் அளித்தார். இதன் பிறகு சிக்கந்தர் ஷா கபீரைப் பெரிதும் போற்றலானான். அவனுடைய மதகுருவான ஷேக் தகி பொறாமைத் தீயில் வெந்தார். இந்த இந்துப் பக்கிரியை மன்னன் என்றாவது குருவாகவே ஏற்றுவிட்டால் என்னாவது என்று மருகினார். கபீரை விரட்ட வழி யோசிக்கலானார். காசி நகர இந்து, முஸ்லீம் மதகுருமாரிடமிருந்து அவருக்கு வலிய உதவி வந்தது. கபீர் பற்றிய புகார்களைச் சுமந்து கொண்டு அவர்களே ஷேக்கிடம் வந்தார்கள்.

அனந்த தாஸ் தமது 'பரிச்சய்' நூலில் சிக்கந்தரின் காசி வருகை பற்றிக் குறிப்பிடுகிறார். ஆனால் அவன் நோய் பற்றியோ, ஷேக் தகி அவன் கூட வந்தாரா என்பது ப்ற்றியோ ஒன்றும் கூறவில்லை. தில்லி சுல்தான் வந்தவுடன் காசி நகரத்துக் காஜிகளும் முல்லாக்களும் பண்டாக்களும் பனியாக்களும் (வணிகர்) ஒன்று கூடிக் கபீர் பற்றி முறையிட்டதாக அனந்தர் கூறுகிறார். அவர்கள் வேண்டினர்: "ஐயா! ஒரு சேதி கேளும்: நீதி வழங்கும்: உங்கள் அடிமைக்கார நெசவாளன் ஒருவனின் செய்கையெல்லாம் தொந்திரவாய் இருக்கிறது. தன் மதமாகிய இஸ்லாமின் வழிகளை விட்டான். இந்து மதத்தையும் இகழ்கிறான். ஏகாதசியில் உபவாசம் இருப்பதை ஏளனம் செய்கிறான். வேதங்களை நிந்திக்கிறான். திருத்தல யாத்திரையைத் திட்டுகிறான். சிவன், கணபதி, சரஸ்வதி முதலிய எல்லாத் தெய்வங்களையும் தூஷிக்கிறான். இந்து மதம் இஸ்லாம் மதம் இரண்டையும் விட்டுச் சொந்த மதம் ஆரம்பிக்கிறான். நானே கடவுள் என்கிறான். நாத்திகன் இவன் ஊரில் இருக்கும் வரையில், காசியில் ஒருவன் கூட காஜிக்கோ பார்ப்பனருக்கோ பயப்படமாட்டான். இவனை ஊரைவிட்டு விரட்டும்படி, தந்தையுமாகிக் காக்கும் வேந்தே, தேவரீரை வேண்டுகிறோம்."

கபீரைத் தன்முன் இட்டுவர காவலரை அரசன் ஏவினான். வந்த கபீரை வேந்தனுக்கு விழுந்து வணங்கும்படி காஜி பணித்தார். கபீர் மறுத்தார். வேந்தன் வெகுண்டான். இடிபோல் கர்ஜித்தான். "தாசமுறும் நெசவாளியே, உன் மத வழியை விட்டு நரக வழியை நாடியதேன்?" சாந்தத்துடன் கபீர் சொன்னார்: "இந்துக்களோ முஸ்லீம்களோ என்னை இகழ்வதை நான் மதியேன். குருவின் அருளால் இறைவன் தாள் பணிந்து அவன் புகழ் பாடுவேன். இராமன் கருணா கடாட்சம் இருக்க, கொற் றவனோ மற்றவனோ யாரையும் நான் அஞ்சேன். "

காஜி "காஃபிர் இவன், இஸ்லாமின் பகைவன், இவன் மாலையைப் பிடுங்கி, சந்தனத்தை அழித்து, இவனைப் பாறையில் மோதுங்கள்" என்றார்.

கபீர் சொல்வார்: "காஃபிர் நீயே. ஆட்டையும் மாட்டையும் கோழியையும் அடிக்கும்படி எந்த அறநூல் உனக்குச் சொல் கிறது? கொல்வாரின் எலும்பை நொறுக்கிக் கூற்றுவன் தண்டிப் பான். நாதன் நாமமே என் பலம். நமனை அஞ்சேன்."

சுல்தான் சினத்தால் துடித்தான். கபீரைக் கட்டிக் கங்கையில் போடக் கட்டளையிட்டான். 'சங்கிலி பூட்டியே கங்கையில் பாய்ச்சினும் நற்றுணையாவது நாதன் நாமமே' என்று கபீர் இருந்தார். தளைகள் பிளந்தன. மனைப்பலகையில் அமர்வது போல் கபீர் புனல் மேல் வீற்றிருந்தார்.

ஒரு பசுவைப் பாதுஷா கொன்று, "நீயே கடவுள் என்றால் இந்தப் பசுவைப் பிழைக்க வை" என கபீரிடம் கூறியதாகவும், அவர் தொட்டவுடன் பசு உயிர் பெற்றதாகவும் சில நூல்கள் கூறிகின்றன. பக்த நாம தேவர் பற்றியும் இக்கதையில் கூறப் படுவதால், கபீரின் பெருமைக்காக அவரோடு இது இணைக்கப் பட்டிருக்கலாம்.

நீரில் மிதந்தது ஏதோ மந்திரஜால வித்தையால்தான் எனக் கருதிய மன்னனின் ஆட்கள், கபீரின் கை கால்களைக் கட்டி ஒரு வீட்டுக்குள் போட்டு வீட்டுக்குத் தீ வைத்தார்கள். பக்தனை மீண்டும் பரமன் காத்தார். வீடு எரிந்து சாம்பலாயிற்று. கபீரோ ஒரு முடி கூடக் கருகாமல் தேஜோமயமாகப் பிரகாசித்தார்.

பிரகாலதனுக்கிணையான பக்தர் என கபீர் போற்றப் படுகிறார். பிரகலாதனுக்கு நேர்ந்த சோதனைகளே அவருக்கும் நேர்ந்தன. அவரும் ஒரு தீங்குமின்றி சோதனைகளிலிருந்து மீண்டார்.

இந்த நெசவாளி நிச்சயம் ஏதோ மந்திரவாதி என்ற

முடிவுக்கு மன்னன் வந்தான். மறுபடியும் அவரைக் கட்டி மதயானையின் முன்பு போட ஆணையிட்டான். அது மகா பயங்கரமான யானை. ரணகளத்தில் பல மாவீரர்களின் உயிரைக் குடித்து ரணஜீத் என்ற பெயர் பெற்றது. தன் மாவுத்தனையே மதியாது, தன்னுடைய சொந்த நிழலையே யாரோ எதிரி என நினைத்துத் துவைக்கும் சீற்றமுடையது. அதன் சங்கிலியை அவிழ்த்து விட்டவுடன் மக்கள் எல்லாரும் கிலி பிடித்து ஓடினர். ஆனால் அதுவோ, கபீரை நெருங்கிய வுடன் வாலை ஒடுக்கிக் கொண்டு, திரும்பி ஓடியது. ஒரு சிம்மம் போலக் கபீர் அதற்குத் தோற்றமளித்தார். மாமத யானையும் பக்தனை ஒன்றும் செய்ய முடியவில்லை.

சிக்கந்தர் ஷாவும் ஷேக் தகியும் கபீரைப் பல்வேறு விதங்களில் ஐம்பத்திரண்டு முறை சோதித்தார்கள் என்றும் கடைசியில் அவர் காலில் விழுந்து மன்னிப்புக் கோரினார்கள் என்றும் கூறப்படுகிறது.

சிக்கந்தர் லோதியும் கபீரும் உடன் காலத்தவர். இருவரும் சந்தித்திருக்கிறார்கள் என்ற கர்ண பரம்பரைக்கதை வெகு கால மாய் இருந்து வருகிறது. பல பக்தர்கள், மேற்சொன்ன மூன்று முக்கிய சோதனைகளைத் தங்கள் நூல்களில் குறிப்பிடவும் செய்திருக் கிறார்கள். பிரியாதாஸ், 'பக்தமால்' பற்றிய தம் உரையில், சிக்கந்தர் சம்பவத்தை இவ்வாறு விவரிக்கிறார்.

அந்தணர் வெந்தனர் கபீரின் பெருமையால்
சிக்கந்தர் அரசன் முன்னே சென்றனர்.
கூடவே சென்றாள் அன்னையும் முறையிட.
'கெடுத்தான் ஊரைக் கபீர்' எனக் கூவினர்.
'கொணர்வாய் அவனை' என்றான் அரசன்
'உணரச் செய்வேன் அவன் தன் இழிவை.'
வணங்கெனக் காஜி வந்தவரை ஏவ
'வணங்கான் இறைவன் அடியான்' என்றார்.

பிறகு மேற்சொன்ன மூன்று தண்டனைகள் குறிப்பிடப் படுகின்றன. பக்தர் தாது தயாளரின் சீடர் ரஜ்ஜப்ஜீயும் கூறுகிறார்:

சங்கிலி பிணைத்துச் சலத்தில் போட்டனர்,
அஞ்சிலர் நீரைத், தீயை, யானையை.

பஞ்சாபில் உள்ள சுடானியைச் சேர்ந்த கரீம்தாஸ் என்பாரும் தன் 'கிரந்த் சாஹப்'பில் இந்த நிகழ்ச்சிகளைக்

குறிப்பிடுகிறார். அனைத்துக்கும் மேலாக, சில கபீர் பதங்களி லேயே கூட இவை காணப்படுகின்றன.

அடி மலரை மனமதுவே பற்றிய பின்
உடற் கவலை அவர்க்குண்டோ உலகத்தே.
கங்கைநதி ஆழ்நீரில் கபீரையும்
சங்கிலியால் கட்டிப்பின் போட்டார்கள்.
அலைகள் தகர்த்தன பூட்டிய தளையை,
அலைமேல் அமர்ந்தான் மான்தோல் மேல்போல்.
நீரிலும் நிலத்திலும் நற்றுணையாபவன்,
வேறிலன் இராமனே கபீரன் சொல்வான்

யானை முன் தள்ளப்பட்டதைச் சொல்லும் ஒரு பதமும் உள்ளது. தீச் சோதனை பற்றிய பாடல் வருமாறு:

இராமனை நினைத்தால் தீயும் சுடுமோ,
இராமனே நிறைந்தால் இதயம் தனிலே.
தீயும் அவனே, காற்றும் அவனே,
நாயகன் எரிந்தால் காப்பான் யாரே,
எரிவதும் யாரே நோவதும் யாரே,
சாரங்கபாணியின் லீலை யாவும்,
இரண்டே சொற்கள் கபீரன் சொல்வான்,
இறைவன் இருந்தால் நம்மைக் காப்பான்.

மிகப் பழமையான ஏடுகளில் இந்தப் பாடல்கள் காணப் படுகின்றன. கபீரே இயற்றியவை அவை என்றும் தோன்றுகிறது. எனவே இந்த வரலாறுகளில் சிறிது உண்மை இருக்கலாம் என்று தோன்றுகிறது. கடினப் பரீட்சைகளில் கபீர் வென்ற பிறகுதான் நாடு முழுவதும் அவர் புகழ் பரவியது என்பது நிச்சயம். வெறும் சொற்களால் ஒருவருக்குப் புகழ் ஏற்பட்டு விடாது. அசாதா ரணச் செயல்களையும் அவர் புரிந்திருக்க வேண்டும். இருபதாம் நூற்றாண்டில் வாழ்வோருக்கு, மேற்கூறிய நிகழ்ச்சிகளை நம்புவது கடினமாயிருக்கலாம். ஆனால் நம்முடைய தொன்மை யான பல ஆன்மீக மரபுகளை இழந்துவிட்டோம் என்பதையும் நாம் நினைவிற்கொள்ள வேண்டும். யோகியும் பக்தருமாகிய கபீரை, தீயும் நீரும் ஒன்றும் செய்ய முடியவில்லை என்றால், அதை நம்பவே முடியாது எனச் சொல்வதற்கில்லை. இன்று கூட கொடும் விலங்குகள் வாழும் அடர்ந்த காடுகளில் எத்தனையோ யோகிகள் ஏகாந்தமாய் வசிக்கிறார்கள். அவர் களைக் காப்பவர் யார்?

எனினும், கபீருக்கு அத்தனை கொடுமைகளையும் இழைத்தவன் சிக்கந்தர் லோதிதானா என்பது கேள்விக்கு உரியதே. சிக்கந்தரின் உடன் காலத்தவர் கபீர் என ஏற்பதில் சிரமம் இருக்கிறது. விக்ரம ஆண்டு 1545 முதல் 1575 வரை அவன் ஆண்டான். 1551இல் அவன் காசிக்கு வந்ததாகவும் சரித்திரம் கூறுகிறது. ஆனால் 1505 இலேயே கபீர் இறந்திருக்கக் கூடும் என்பதை நாம் பின்னர் காண்போம். 1575இல்தான் கபீர் மறைந்தார் எனக் கருதுவாரும் உண்டு. என்றாலும், கபீர் சிக்கந்தரைச் சந்தித்தார் என்பதற்குச் சரித்திரச் சான்று ஏதும் இல்லை. அவன் இந்துக்களைக் கொடுமைப்படுத்திய கொடுங் கோலன் என்பது தெரியும். எனவே கபீரின் சரிதையை முதலில் எழுதியவர்கள், அவருக்கு இழைக்கப்பட்ட கொடுமைகளுக் கெல்லாம், சிக்கந்தரின் மீது பழியைப் போட்டிருக்கலாம். இது தவிர, சிக்கந்தர் என்பது அலெக்சாந்தரின் திரிபு ஆகையால், சில கபீர் மார்க்க நூல்கள் மகா அலெக்சாந்தரோடும் சிக்கந் தரைக் குழப்புகின்றன.

இன்னொரு புதுமை, சிக்கந்தருடன் குறிப்பிடப்படும் ஷேக் தகி கபீரின் குரு என நெடுங்காலத்துக்குக் கருதப்பட்டதாகும். மௌலானா குலாம் 'ஸர்வர்' என்பார் இந்தத் தவறுக்கு முதலில் காரணமாயிருந்திருக்கலாம். அவர் 'கஜினதுல் அஸபியா' என்னும் தம் நூலில் கூறுவதாவது: "ஷேக் கபீர் ஜுலாஹா (நெசவாளி), ஷேக் தகியின் ஒரு சீடர். இறைவனைப் பற்றி இந்தியில் முதலில் எழுதியவர் அவர். அவருடைய மத சமரசம் காரணமாக இந்துக்கள், முஸ்லீம்கள் ஆகிய இருவரும் அவரைக் குருவாய் ஏற்றார்கள். கி.பி. 1594இல் (விக்ரம ஆண்டு 1651) அவர் இறந்தார். ஷேக் தகி, கி.பி. 1572இல் இறந்தார்." இங்கு கூறியுள்ள கபீரின் மரணத் தேதியிலிருந்து, இவர் பின்னர் வாழ்ந்த ஒரு ஸூஃபி பக்தர் என்றும், தவறுதலாகக் காசிவாசி கபீருடன் இணைக்கப்பட்டார் என்றும் தோன்றுகிறது.

'கபீர் பீஜக்' என்னும் நூலில் ஷேக் தகியின் பெயர் இருமுறை வருவதாலும் இந்தக்குழப்பம் வந்திருக்கலாம். கபீர் வாக்குகளின் மிக ஆதாரபூர்வமான தொகுப்பு என கபீர் மார்க்கத்தாரால் கருதப்படும் நூல் இது. இதன் 48-வது 'ரமைனி' யில் "மாணிக்புரில் உறைந்த கபீரன், ஷேக் தகியின் பெருமை கேட்டான்" என்று வருகிறது. 63-வது ரமைனி கூறும் :

ஆடாடென்றே ஆட்டுவிப்பான்,
ஆடல்காரன் ஆடுகின்றான்.

உள்ளத்துறைவான், காலம் கடந்தான்,
கொள்வாய் மனதில், ஷேக்கு தகி.

இருவரும் எப்போதாவது சந்தித்திருக்க வேண்டும் என்று இதன் மூலம் தோன்றும். ஆனால், 'கபீர் பீஜக்' கபீர் மறைந்து பற்பல ஆண்டுகள் கழித்துத்தான் தொகுக்கப்பட்டிருக்க வேண்டும் என இப்போது அநேகமாக உறுதியாகி விட்டது. அதில் பல இடைச் செருகல்கள் இருக்கக்கூடும். எனவே இந்த நூலைக் கபீரின் வாழ்க்கை நிகழ்ச்சிகளுக்கு உறுதியான ஆதாரமாய்க் கொள்வது முடியாது. இரண்டாவதாக, கபீரின் உடன்காலத்தவராகவோ குருவாகவோ ஷேக் தகி என ஒருவர் இருந்ததாய் சரித்திரத்தில் குறிப்பு ஏதும் கிடையாது. அந்தப் பெயரில் இரண்டு ஸூஃபி பக்தர்கள் இருந்தார்கள். ஒருவர் மாணிக்புரில் வாழ்ந்தவர். இவர் கபீர் இறந்ததற்கு நூறு ஆண்டு கழித்து இறந்தார். இலாஹாபாத் அருகே ஜூம்சியில் வசித்த மற்றவரோ, கபீர் பிறப்பதற்கு நூறு ஆண்டு முன்னால் இறந்து விட்டார். இவர்கள் கபீரின் உடன் காலத்தவராய் எப்படி இருந்திருக்க முடியும்? எனவே ஷேக் தகியைக் குறிப்பிடும் ரமைனிகள் பின்னால் செருகப்பட்டவை என்ற முடிவு தவிர்க்க முடியாததாகிறது. அவை ஆதாரபூர்வமானவையாய் இருந்தால் கூட, ஷேக் தகி கபீரின் உடன்காலத்தவர் என்று ஏற்படுகிறதே அன்றி, கபீரின் குரு அவர் என ஸ்தாபிதமாகவில்லை.

இருந்தாலும், 'நிர்பவஞானம்', 'அனுராகசாகரம்' முதலிய கபீர் மார்க்கக் கிரந்தங்களில், இருவரையும் பற்றி நிறையக் கதைகள் உள்ளன. கபீரை ஐம்பத்திரண்டு சோதனைகளுக்கு ஷேக் தகி உள்ளாக்கியதாக இவை கூறுகின்றன. இவற்றில் மூன்றை முன்பே பார்த்தோம். மற்றும் இரண்டு சுவையானவை. கமால், கமாலி என்பவர்களின் உயிரை மீட்ட கதைகள் இவை.

கபீரின் சக்திகளைக் கண்கூடாகக் கண்ட சிக்கந்தர் லோதி உண்மையிலேயே அவர் மகாத்மா என்று ஒப்புக்கொண்டதாகக் கூறப்படுகிறது. அவன் தில்லி திரும்புகையில் கபீரையும் உடன் வருமாறு வேண்டினான். அவர் இசையவே தனது மிகச் சிறந்த யானையின் மீது அவரை ஏற்றி ராஜ உபசாரங்களுடன் அழைத்துச் சென்றான். வழியில் பிரயாகையில், கங்கையும் யமுனையும் கூடும் திரிவேணி அருகே அரச பரிவாரம் முகாம் இட்டது. இரவுச் சாப்பாட்டுக்குப் பின் நதிதீரத்தில் கபீர் உபன்யாசம் செய்ய, அனைவரும் கேட்டிருந்தார்கள். அப்போது

ஒரு சிறுவனின் பிணம் ஆற்றில் கிழக்குப் பக்கமாக மிதந்து சென்றது. உடனே ஷேக் தகி மன்னனைப் பார்த்து, "வேந்தே, கபீர் கூறும் சக்திகள் மெய்யாகவே அவரிடம் இருந்தால், இந்தக் குழந்தைக்கு உயிர் அளிக்கட்டும். பிறகு நாங்களும் நம்பிடுவோம்" என்றார். கபீரும் கையைத் தூக்கி "குழந்தாய் வா" என அழைத் தார். சடலம் அருகே வந்தது. கபீர் இறைவனை நினைந்து, "இந்த உடலிலே மீண்டும் உயிர்குடி கொள்ளுக" என்றார். அவர் கையிலிருந்து சோதி ஒன்று புறப்பட்டு உயிரற்ற உடலில் புகுந்தது. உயிர் பெற்ற சிறுவன் கரையேறிக் கபீரின் காலில் விழுந்தான். நம்ப முடியாத வியப்பைக் குறிக்கும் வகையில், "கமால் செய்து விட்டீர்களே ஐயா!" என்று சுல்தான் கூவினான். "கமால் என்று நீ சொன்ன சொல்லே சிறுவன் பெயராக இருக்கட்டும்" என்று கபீர் கூறினார்.

சிறுவனின் முன்கதை அறிய சுல்தான் விரும்பினான். கபீர் பணித்ததன் பேரில் பாலகன் தன் முன்கதையைச் சொல்ல லுற்றான். "சில ஆண்டுகள் முன் நான் உத்தரகண்டத்தில் அந்தணர் குலம் ஒன்றில் உதித்தேன். எனக்கு ஒரு தங்கையும் இருந்தாள். இருவரும் இமயம் சென்று தவமிருந்தோம். எங்கள் தவத்தால் மகிழ்ந்த கபீர் எங்களுக்குக் காட்சியளித்தார். ஆன்ம ஞானம் உபதேசிக்கும்படி அவரை வேண்டினோம். உரிய சமயம் வரும்போது இந்த உத்தம ஞானம் எங்களுக்குக் கிட்டும் என்று சொல்லி அவர் மறைந்தார். சில ஆண்டுகள் கழித்து நான் இறந்தேன். என் பெற்றோர் என்னைக் கங்கையில் போட் டார்கள். பின் நடந்த கதை நீங்கள் அறிவீர்கள்." கபீரின் அருளால்தான் தனது முன் வாழ்க்கை நினைவு இருப்பதாகவும் சிறுவன் கூறினான். ஷேக் தகி வெட்கித் தலை குனிந்தார். இந்தச் சிறுவன்தான் கபீரின் பிரதான சீடனாகப் பிரசித்தி பெற்றான் என்று கூறப்படுகிறது.

கமால் கபீரின் மகனே எனப் பலர் கொள்வர். சீக்கியரின் 'க்ரந்த் சாஹப்'பில் உள்ள கபீர் வாக்குகள் பகுதியிலிருந்து இந்த ஈரடியை அவர்கள் மேற்கொள் காட்டுகிறார்கள்:

மகன் கமால் பிறப்பால் கபீரன் கெட்டான்,
முகுந்தனை மறந்தான், பொருளைச் சேர்த்தான்.

ஆனால் குருவானவர், ஆன்மீகத் தந்தையாகக் கருதப் படுவதால், சீடனே மகன் எனக் குறிப்பிடப்பிட்டிருக்கலாம். கமாலைச் சீடனாகப் பெற்ற பிறகு கபீர் குடித்தனம் நடத்த

முற்பட்டபோது மேற்சொன்ன பேச்சு கிளம்பியிருக்கலாம். மேலும் இந்தச் செய்யுள் கபீரே கூறுவது போல் அன்றி வேறு யாரோ அவரையும் கமாலையும் பற்றிக் கூறுவது போலவே அமைந்துள்ளது. கபீரின் மறைவுக்குப் பிறகு அவரது பாடல் களில் சேர்க்கப்பட்ட பல செய்யுள்களில் இதுவும் ஒன்றாக இருக்கலாம்.

கமாலியைப் பற்றியும் இதேபோல் ஒரு கதை உள்ளது. ஒரு நாள் சுல்தான் சிக்கந்தரின் தர்பாரில் கபீர் உபன்யாசம் செய்து கொண்டிருந்தார். அப்போது ஷேக் தகி உள்ளே வந்தார். சிலநாள் முன்தான் தன் புதல்வி ஒருத்தி இறந்து போனதால் சோகத்தில் ஆழ்ந்திருந்த அவர் சொன்னார்: "கங்கையில் மிதந்த ஒரு சிறுவனுக்குக் கபீர் உயிர் அளித்தார் எனக் கூறப்படுகிறது. ஆனால் அது ஒரு பெரிய காரியம் இல்லாமலும் இருக்கலாம். ஏனென்றால், சில சமயம் உடலின் மற்ற பகுதிகள் செத்திருக்க, மூளையின் ஒரு மூலையில் உயிர் ஒட்டிக் கொண்டிருப்பது சாத்தியமே. கொஞ்சம் திறமையிருந்தால், இது மாதிரி உடலுக்கு உயிர் அளித்துவிட முடியலாம். என் மகள் செத்துப் புதைக்கப் பட்டும் விட்டாள். அவளைக் கபீர் பிழைக்க வைத்து விட்டால் அவரை நான் என்றும் போற்றத் தயார்." பிறகு கல்லறையைக் கபீர் திறக்கச் சொல்லி, "ஷேக் தகியின் மகளே, எழுவாய்" என்றார். இவ்வாறு மும்முறை அழைத்தும் பெண் பிழைத்தெழ வில்லை. கூட்டத்தாரிடையே ஏளனக் கிசுகிசுப்புக் கிளம்பியது. அப்போது கபீர், "கபீரின் மகளே, எழுவாய்" என்றார். உடனே பெண் உயிர் பெற்றெழுந்து கபீரின் காலில் விழுந்தாள். கமாலி என அவளுக்குப் பெயரிட்டார். ஷேக்கின் உள்ளம் உருகியது. கபீரிடம் மன்னிப்புக் கோரினார். கமாலி ஷேக்குடன் செல்ல மறுத்தாள். கபீரையே தந்தையாகப் பாவித்து அவருக்குச் சேவை செய்வதிலேயே தன் வாழ்நாளைக் கழித்தாள்.

கமால், கமாலி கதைகளும், கபீர் மார்க்கத்தாரின் நூல்களில் மட்டுமின்றி கரீப்தாஸ் முதலிய பக்தர்களின் நூல்களிலும் காணப்படுகின்றன. ஆனால் அனந்த தாசர் தமது 'பரிச்சய்' நூலில் அவர்களைப் பற்றி ஒன்றும் சொல்லக் காணோம். ஒருகால் கமாலும் கமாலியும் கூட, தர்மதாஸைப் போலவே கபீரின் மறைவிற்கு வெகுகாலம் பின்னர் தோன்றியவர்களாக இருக்கலாம். தர்மதாசரைப் போலவே கபீரின் பரம பக்தர்களாய் இருந்தபடியால், இவர்களும் கபீரின் நெருங்கிய சீடர் குழாத்தில் சேர்க்கப்பட்டிருக்கலாம். எப்படியிருப்பினும் அவர்கள் கபீரின்

குழந்தைகள் அல்லர் என உறுதியாய்க் கருதலாம். உடன் காலத்தவராய் இருந்தால் கூட, அவர்கள் சீடர்களாய்ததான் இருந்திருக்க முடியும்.

கமாலும் கமாலியும் கபீரின் குழந்தைகள் என்போர், அதற்குப் பொருத்தமாய் ஒரு கல்யாணக் கதையும் வைத்திருக் கிறார்கள். லோயி என்னும் பெண்மணியை அவர் மணந்து கொண்டதாகவும், கமாலும் கமாலியும் இவள் குழந்தைகளே என்றும் கூறப்படுகிறது. லோயியைப் பற்றிய கதையும் சுவையானது. கங்கைக் கரையில் காட்டில் ஒரு துறவி வசித்து வந்தார். ஒரு நாள் ஆற்றில் நீராடச் சென்ற அவர், ஒரு பெண் குழந்தை கம்பளியில் (லோயி) சுற்றப்பட்டு ஆற்றில் மிதந்து வருவதைக் கண்டார். கருணைகொண்டு அதைத் தம் ஆசிரமத் திற்கு எடுத்துச் சென்று வளர்க்கலானார். 'லோயி'யில் கண்ட குழந்தைக்கு 'லோயி' என்றே பெயரிட்டார். பல்லாண்டுகள் சென்றன. அவள் மங்கையாய் வளர்ந்தாள். ஒரு சமயம் கபீரும் சில சாதுக்களும் அங்கு வர நேர்ந்தது. அப்போது துறவி குடிலில் இல்லை. லோயி பெரியோர்களை வரவேற்று உபசாரம் செய் தாள். ஆளுக்கு ஒரு குவளை பால் கொடுத்தாள். எல்லாரும் அதை அருந்த, கபீர் மட்டும் அதை அருந்தவில்லை. ஏனோ என்று கேட்க, "இன்னுமொரு சாது இங்கே வந்து கொண்டிருக் கிறார். இதோ வந்து விடுவார். அவருக்கு இந்தப் பாலைக் கொடுக்கலாம்" என்று கபீர் விளக்கினார். அவர் சொன்ன படியே அடியார் ஒருவர் விரைவில் வரக்கண்டு அனைவரும் வியப்பில் ஆழ்ந்தனர். மங்கையும் பரவசம் அடைந்தாள். கபீர் புறப்பட்டபோது தானும் கூட வருவதாய்ச் சொன்னாள். கபீர் இசைந்தார். காலப்போக்கில் அவர்கள் மணந்து கொண்டார்கள்.

சில கபீர் மார்க்க நூல்கள், லோயி மனைவி அல்ல, சிஷ்யைதான் என்கின்றன. அந்த வரலாறு வருமாறு: லோயியை வளர்த்த துறவி இறக்கும் தறுவாயில் அவளை அழைத்து, "மகளே, நான் விரைவில் விடைபெறப் போகிறேன். ஆனால் நீ இங்கேயே இரு. ஒரு நாள் மகாத்மா ஒருவர் இவ்வழி வருவார். எல்லாக் கேள்விகளுக்கும் அவர் ஒரே ஒரு விடையையே சொல்வார். அவருடன் நீ செல்வாயாக. அதுவரை காத்திரு" என்று கூறினார். பிறகு அவர் உயிர் பிரிந்து விட்டது. லோயி காட்டுக் குடிலில் தனியே வசித்து வந்தாள். அவ்வழி வரும் பெரியோர்களையெல்லாம், அவர்கள் பெயரென்ன, மதமென்ன, மார்க்கமென்ன என விசாரித்து வந்தாள். ஒரு நாள் இரு

மகாத்மாக்கள் வந்தார்கள். அவர்களுக்கு அவள் அதிதி உபசாரம் செய்து, அருந்தப் பால் கொடுத்தாள். ஒருவர் அதைப் பருக, மற்றவர் பருகாமல், "இன்னொரு அடியார் இங்கு விரைவில் வருவார். அவருக்கு இந்தப் பாலை வைத்திருப்போம்" என்றார். உடனே லோயி முதலில் அவர் நாமம் கேட்டாள். "கபீர்" என்ரார். 'மார்க்கம் யாதோ?' மீண்டும் "கபீர்" என மொழிந்தார். கேட்ட கேள்விக்கெல்லாம் "கபீர்" "கபீர்" என பதில் கூறும் இந்தப் பாவனரே தன் தந்தை மனத்திலிருந்த சான்றோர் என லோயி உணர்ந்தாள். "சுவாமி, அடியாளைச் சிஷ்யையாக ஏற்றருள்வீர்" என்றாள். கபீரும், "வந்திடுவாய் மகளே, பரமனைப் பூஜித்து வாழ்ந்திடுவாய்" என்றார்.

எனினும், கபீரின் பாடல்களில் பன்முறை வரும் 'லோயி' என்னும் சொல்லைப் பாமர மக்கள் ஒரு பெண்ணின் பெயர் எனத் தவறாகப் புரிந்து கொண்டு பிறகு பல கதைகளைக் கட்டிவிட்டார்கள். என்றே தோன்றுகிறது. உதாரணமாக "கேளாய் (கேளீர்) லோயி, எவருடையவனும் நான் அல்லேன், எவரும் எம்மவர் அலர்" என்றும், "கேளாய் (கேளீர்) லோயி, எவரும் ஏமாறாதீர்" என்றும் இரண்டு பாடல்களில் வருகிறது. உலகம், உலகோர் எனப் பொருளுடைய "லோக" என்னும் வடமொழிச் சொல்தான் 'லோய்' 'லோயி' என்று திரிந்து, இப்போது "லோக்' என்று இந்தியில் இறுதி வடிவம் பெற்றுள்ளது. எனவே 'கேளீர்—உலகீர்' என்ற பொருளில்தான் கபீர் பாடியிருக் கிறார். ஆனால் 'லோயி' என்பதைப் பெண்பால் பெயராகச் சிலர் புரிந்து கொண்டு, கதைகளைக் கட்டிவிட்டார்கள். இந்த அனர்த்தத்தைக் கண்ட கபீர் மார்க்கத்தினர், மனைவி என இல்லாமல் சிஷ்யையாக இருக்கட்டும் எனக் கதையைக் கொஞ்சம் மாற்றியிருக்கலாம். உண்மையென்னவெனில், அனந்த தாசரின் 'பரிச்சய்' யிலோ, கபீரின் வேறு எந்தப் பழைய வரலாற்றிலுமோ, லோயியின் பெயர் இல்லை. நிஜமாகக் கபீர் வாக்கு எனச் சொல்லக்கூடிய பாடல்களிலும், 'உலகோர்' என்ற பொருளில் தவிர வேறு எந்த வகையிலும் அது உபயோகிக்கப் படவே இல்லை. ஒரு பெண்ணின் பெயர் அது என்று நினைக்க இடமில்லை.

கபீருக்கு த்னியா அல்லது ராம்ஜனியா என்ற பெயரில் இரண்டாவது மனைவி ஒருத்தி இருந்ததாகக் கூட சிலர் கூறுவர். சீக்கியர்களின் 'கிரந்த் சாஹப்' நூலில், கபீரின் பாடல்கள் கொண்ட ஒரு பகுதியில் இரண்டு பாடல்களில் இவள் பற்றிய

குறிப்பு வருகிறது. ஒரு பாடலில், "என் மருமகள் பெயர் தனியா; ராம்ஜனியா என அவளை அழைத்தார்கள். இந்த மொட்டைத் தலையர்கள் என் வீட்டைக் கெடுத்தார்கள்" என்ற வரிகள் உள்ளன. இது கபீரின் தாய் முறையிடுவதுபோல் அமைந்தது.

இவை உண்மையில் கபீரின் பாடல்களாயிருந்தால் அவருக்கு குடும்பம் இருந்ததாய் உறுதிப்படும். ஆனால் 'கிரந்த் சாஹப்'பில் உண்மையில் கபீரின் படைப்பு அல்லாத பல பாடல்கள் சேர்ந்திருப்பது வெளிப்படை. கபீர் தம் பாடல்களை எழுதும் வழக்கம் கிடையாது. அவர் சொல்வதைப் பிறர் கவனத்துடன் எழுதிக் கொண்டதாகத் தெரியவில்லை. அவர் வாழ்நாளிலேயே தொகுக்கப்பட்டதாகக் கூறக்கூடிய ஒரு நூலும் கிடைக்கவில்லை. அவர் மறைவிற்குப் பிறகுதான் எல்லாம் தொகுக்கப்பட்டன. கொஞ்சமாகவோ அதிகமாகவோ, அனைத்திலும் இடைச் செருகல்கள் உள்ளன. அசலும் போலியும் நிறையக் கலந்திருப்பதால், "கபீர் சொன்னது கொஞ்சம், பக்தர்கள் சேர்த்தது நிறைய" என ஒரு பழமொழிகூட உள்ளது. நிஜத்தையும் போலியையும் பிரிக்க நான் பெரும் ஆராய்ச்சி செய்து, 'கபீர் கிரந்தாவளி' என்னும் பெயரில் ஒரு நூல் வெளியிட்டுள்ளேன். அவற்றில் மேற்சொன்ன பதங்களைச் சேர்க்கவில்லை. அப்படியே அவை மெய்யானவையாக இருந்தாலும், அவற்றிற்கு ஏதாவது மறைபொருள் இருப்பது திண்ணம். கபீரின் எல்லா வாக்குகளுக்கும் நேர் பொருள் கொள்வது பொருந்தாது. தத்துவார்த்தத்திற்கு ஒரு முக்கிய இடம் உண்டு.

மாதுடன் இருந்தேன் மடமையில் மூழ்கி
தீதென அறிந்தே மாதைத் துறந்தேன்.

என்பதாக ஒரு ஈரடி உள்ளது. கட்டாயம் இது ஒரு இடைச் செருகலே. நம்பகமான ஏடுகளில் இது இல்லவே இல்லை. ஆனால் இப்புத்தகத்தில் முன்பே குறிப்பிடப்பட்டுள்ள கபீரின் ஒரு உண்மையான பாடலில், "வருந்தியழுவாள் கபீரின் அன்னை, இறைவா பாலன் வாழ்வகை ஏதோ" என்றும், "மூவுலகீசன் நம்மையும் காப்பான்" எனவும் கபீர் உறுதியளிப்பதாகவும் வருவது நினைவிருக்கலாம். இங்கு பாலன் என்னும் சொல் கபீரின் மகனைக் குறிக்கிறதோ என ஐயம் எழலாம். ஆனால் எவ்வளவு வயதானாலும், தாய் மகனைக் குழந்தையாகவே கருதுவாள். ஆகையால், இங்கு கபீர் பற்றித்தான் தாயார் கவலைப்படுகிறாள் என்று கொள்வதே சரியாகும்.

சுருங்கச் சொன்னால், கபீர் ஒரு குடும்பத்தில் ஒட்டி

வாழ்ந்தார் என்பது உறுதியாகிறது. ஆனால் மணம் செய்து கொண்டார் அல்லது மக்களைப் பெற்றார் என்பதற்குத் தெளிவான சான்று இல்லை.

கல்யாணம் செய்துகொண்ட ஒரு கிரகஸ்தராகக் கபீரைச் சிலர் ஆக்க முயல்கிறார்கள் என்றால், அவர் நித்திய பிரம்மச் சாரியென நிரூபிக்க வேறு சிலர் விரும்புவர். இதற்கும் ஒரு கதை உண்டு. ஒரு சமயம் விஷ்ணுபகவான் ஒரு அப்சரஸை அழைத்து, "கபீர் என்று என் பக்தன் ஒருவன் காசியில் வசிக்கிறான். அவனை உன் ஜாலங்களால் மயக்க முடிகிறதா, பார்" என்று அனுப்பினார். அவளும், சிருஷ்டிதேவனே மயங்கும் படி சிங்கார ஒப்பனை செய்துகொண்டு, காமத்தை வென்றோ ரையும் தன் கடைக்கண் வீச்சில் காமன்கணையால் தாக்குண்டு கலங்கும்படி செய்யக்கூடிய அதிரூப செளந்தர யுவதியாய், அன்ன நடையும் அமுத மொழியுமாய்க் கபீர் முன் சென்றாள்.

"நிலம் நோக்காமல் என் கண்ணினை நோக்குவாய். இந்த அழகு செல்வத்தையும் காதற் களஞ்சியத்தையும் அடைய மாந்தர் என்னதான் செய்யமாட்டார்கள்? இமயம் சென்று தவமிருக்கிறார்கள். காசிக்குச் சென்று உபவாசம் இருக்கிறார்கள். ஆனால் அவர்கள் என்னை அடையவில்லை. நானே உன்னைத் தேடி வந்தேன். என்னை ஏற்பாய். உன் தவமும் பலித்துவிடும்" என்றாள்.

கபீரோ, "தாயே, விண்ணுலகை ஏன் விட்டாய்? அங்கு என்ன துன்புற்றாய்? இன்பபோகம் நாடுவோர்களிடம் செல்ல வேண்டியவள் என்னிடம் ஏன் வந்தாய்? நெய்துண்டு வாழும் ஏழை நான். உன் நயனங்களில் நச்சினையே நான் காண்கிறேன். இருந்தாலும் உனக்கு என்னிடம் ஏளனமே. ஆண்டவனுக்கு ஆளாகினேன் நான். என் இதயத்தில் உனக்கு இடமில்லை. மன்னிப்பாய்" என்றார்.

பக்தனிடம் தன் தந்திரம் பலிக்காத தேவமாது பகவானிடம் திரும்பிச்சென்று "கதிரவன் திசைமாறினாலும் கபீர் மனம் மாறாது" என்று பகன்றாள். பிரீதியுற்ற பரமன் பக்தனுக்குக் காட்சியளித்து, "வேண்டும் வரம் கேட்பாய், தருவோம். சகல புவன சாம்ராஜ்யம் வேண்டுமா? சர்வ சித்திகளும் வேண்டுமா?" என்றார்.

"சர்வேசா, நான் வேண்டுவது யாதுமில்லை. என் சிற்றறி விற்கு உன்திருவுளம் எட்டுமோ? சிற்றெறும்பு பெருமலையைத் தூக்குமோ? தாரகைகள் நிலவை மறைக்குமோ? கடலும் உள்ளங்

கையில் அடங்குமோ?" என்றார் கபீர்.

மேலும் மகிழ்ந்த பகவான் அடியார் சிரசில் திருக்கை வைத்து அமரத்துவம் அருளி வைகுந்தம் ஏகினார்.

இந்தக் கதை பற்றி கருத்துரைக்கத் தேவையில்லை. எல்லா பக்தர்கள் பற்றியும் இது மாதிரிக் கதைகள் உண்டு. பற்றற்றான் தாள் பற்றினார்க்கு வேறு பற்று யாதுமில்லை எனக் காட்டுவதே இவற்றின் நோக்கம்.

கபீர் தம் உபதேசங்களைப் பரப்ப அவாவினார் எனினும், தம் பெயரில் மதப்பிரிவு எதையும் விட்டுச் செல்லவில்லை. ஆனால் இன்று நாடெங்கிலும் கபீர் மார்க்கத்தின் பல பீடங்களும் அவற்றின் கிளைகளும் இருக்கின்றன. கபீரின் மிக நெருங்கிய சீடர்களில் யாராவது இவற்றை நிறுவியதாகவும் நம்பப்படுகிறது. சத்தீஸ்கரி சாகை என்பது, தர்மதாஸ் சாஹப் என்பவரால் ஆரம்பிக்கப்பட்டது. இந்தக் கிளையினர், கபீர் மறைந்த பிறகு மீண்டும் பாந்தவிகர் என்னுமிடத்தில் அவதரித்து, தர்மதாசருக்கு உபதேசம் அருளி சாகை ஒன்றைத் துவக்கும்படி அவரைப் பணித்ததாய் நம்புகிறார்கள். எனவே இந்தக் கிளை கபீரின் பெயரில் இருந்தாலும், அவர் மறைவிற்குப் பிறகே துவக்கப்பட்டது என்பது தெளிவாய்த் தெரிகிறது. இதுபோல பீஹாரில் ஸாரன் ஜில்லாவில் தநௌதியில் உள்ள மடம் பகவான்தாஸ் என்பவரால் நிறுவப்பட்டது. இவர் கபீர் கூடவே இருந்து அவருடைய ப்ஜனைப் பாடல்களை எழுதிக் கொண்டதாகவும், 600 பாடல் திரட்டு ஒன்றைத் தயாரித்ததாகவும் கூறப்படுகிறது. இந்த நூல் பின்னர் 'பீஜக்' எனப் பெயர் பெற்றது. ஆனால் பகவான்தாஸ் மெய்யாகவே கபீரின் உடன் காலத்தவரா என்பது நிறுவப்படவில்லை. காசியில் கபீர் சௌரா என்னுமிடத்தில் உள்ள மடத்தின் முதல் அதிபதியான மகந்த் ஸூரைத் கோபால் பற்றியும் இதே போன்று கூறப்படுகிறது. கமாலைப் பொறுத்த மட்டில், எவ்வளவோ பேர் வற்புறுத்தியும் அவர் கபீர் பெயரில் எந்த மதப் பிரிவையும் நிறுவ மறுத்து விட்டார் என்றும், தம் பெயரிலும் மடம் எதையும் ஆரம்பிக்க இசையவில்லை என்றும் கூறப்படுகிறது. கபீரே, புது மதப் பிரிவுகளை அமைப்பதைக் கண்டனம் செய்தார். உழைத்துப் பயனுள்ள எளியவாழ்வு வாழ்வதையே அவர் வற்புறுத்தினார். எனவே கமால்தான் அவருடைய முதல் முக்கியமான சீடர் எனச் சொல்வது தகும். கமாலியின் பெயரும் முன்பே குறிப்பிடப் பட்டிருக்கிறது. இவர்கள் தவிர பத்மநாபர், தத்வா, ஜீவா, ஞானி,

ஜாகூதாஸ், ராமகிருபால் முதலிய சீடர்களின் பெயர்கள் குறிப்பிடப்பட்டாலும், இவர்கள் எல்லாரும் கபீரின் உடன் காலத்தவரா என்பது சந்தேகமே.

கபீர் கல்வி கற்கவில்லை என்று கூறப்படுகிறது. "தாளும் மசியும் தொடவில்லை; பேனாவையும் தொடவில்லை; நாலு யுக பக்தன் கபீர் நாவால் நல்லுரை மொழிந்தான்," என்பதாக பீஜக்கில் ஒரு பாடல் உள்ளது.

கபீர் பள்ளிக்கூடம் சென்று கற்கவில்லை என ஒப்புக் கொண்டாலும், அவர் எழுத்தறிவு பெற்றிருந்தார் என்பது உறுதி. கேள்வி ஞானத்தினால் மதம் பற்றியும் ஆழ்ந்த அறிவு பெற்றிருந்தார். வேதங்கள், உபநிடதங்கள், கீதை, பாகவதம் ஆகியவற்றின் சாரத்தை அறிந்திருந்தார். சித்தர்களும் கோரக்நாத மார்க்க யோகிகளும் நிறுவிய மதப்பிரிவுகளின் சடங்குகளையும் மர்மங்களையும் தீர அறிந்திருந்தார். இஸ்லாம் பற்றியோ சொல்ல வேண்டியதில்லை. இவற்றில் எதையும் அவர் கண்ணை மூடிக்கொண்டு பின்பற்றவில்லை என்பது அவருடைய தனிச் சிறப்பாகும். நுட்பமான ஆன்மீகப் பிரச்சினைகளை அவர் தம் சொந்த வழியில் ஆராய்ந்து முடிவு கண்டார். நிர்க்குணப் பிரம்மத்திற்கே பக்தி செய்யும் நிர்க்குண பக்தி என்னும் புதிய சித்தாந்தம் ஒன்றை அவர் வகுத்துக் கொண்டார். காதலாகிக் கசிந்துருகுவதும், விரக தாபமும் இந்த பக்தி வழியில் மிக முக்கிய இடம் வகிக்கின்றன. வெளி வேடமும் பகட்டும் கண்டிக்கப் படுகின்றன. மனம் மாறுவது வலியுறுத்தப்படுகிறது. (ஸுரதி யோகம் என ஒரு புதிய யோக சாதனமாகவே இது பெயர் பெறலாயிற்று) நான்மறை சொல்லுவதும் நாலுபேர் சொல்வதும் என்ன என்று கவலைப்பட்டுக் கொண்டிருக்காமல், இயற்கை யான, சுதந்திரமான வாழ்க்கை வாழ்வது போதிக்கப்படுகிறது.

'பாணிகள்' என்னும் அவர் பாடல்களில் கருத்துக்கள் அடங்கியிருக்கின்றன. ஆனால் அவருடையது அல்லாததும் இந்தப் பாடல்களில் ஒரேயடியாகக் கலந்து போய், மெய்யையும் போலியையும் பிரித்தறிவது அநேகமாய் அசாத்தியமாகிவிட்டது. எழுதி வைப்பதில் கபீருக்கே நம்பிக்கை இல்லாமல் இருந்தது, இதற்கு ஓரளவு காரணமாகும். எனவே அவருக்குத் தெரிந்து எழுதி வைப்பதற்கு மற்றவர்களும் துணிந்திருக்கமாட்டார்கள். ஏற்கெனவே கூறியவாறு, பகவான் சாகப் ஒருவர்தான், பின்னர் 'பீஜக்' என்று பெயர் பெற்ற ஒரு திரட்டைத் தயாரித்தார். இதுவும், கூறப்படுவது போல அவ்வளவு தொன்மையானது

அல்ல என்பது பார்த்தவுடன் தெரிந்து விடும். அச்சிடப்பட்ட முதல் கபீர் நூல் இதுதான். இதன் முப்பது நாற்பது பதிப்புகள் இன்று வரை வெளியாகியிருக்கின்றன. கபீர் மார்க்கத்தினர் இதைத் தங்களுடைய ஆதார தர்ம நூலாகக் கருதுவதே இதற்குக் காரணம். சிறிது கூடக் கலப்படம் இல்லாமல், கபீரின் உண்மை யான வாக்குகள் இதில் அடங்கியிருப்பதாக அவர்கள் நம்பு கின்றனர். ஆனால் உண்மை என்னவென்றால், இன்று உள்ள கபீர் நூல்களில் எதையும் முழுமையாய் அவருடையதுதான் என்று நம்புவதற்கில்லை. கபீர் காலத்திலேயோ அல்லது அவர் மறைந்தவுடனேயோ தொகுக்கப்பட்டதாகக் கூறக்கூடிய எந்த நூலும் இப்போது இல்லை. இதனால், இப்போது உள்ள ஒவ்வொரு நூலிலும் பாடபேதம் உள்ளது. பாடல்களின் எண்ணிக்கையும் வரிசையும் மாறுபடுகின்றன. விக்ரம ஆண்டு 1661இல் சீக்கியர்களின் ஐந்தாவது குரு அர்ஜுன தேவரின் கட்டளைப்படி தொகுக்கப்பட்ட சீக்கிய மத நூலாகிய ‘கிரந்த் சாஹப்’ பக்தர்களின் பாசுரங்கள் அடங்கிய ஒரு பெரிய பொக்கிஷமாகும். அதில் சீக்கிய குரவர் தவிர வேறு அடியார் களின் வாக்குகளும் உள்ளன. கபீரின் சுமார் 225 பதங்களும், 252 ஈரடிச் சுலோகங்களும் அதில் காணப்படுகின்றன.

தங்களுடைய குரவரின் ஆன்மா கிரந்த் சாஹப்பில் உறை வதாக நம்பும் சீக்கியர்கள், அதற்குப் பிரதி எடுக்கையில் ஒரு எழுத்துகூட மாறாமல் மிக ஜாக்கிரதையாய் பார்த்துக் கொள்வார்கள். எனவே கடந்த நூற்றாண்டுகளில் அந்த நூல் ஒரு பிழையும் இன்றி அப்படியே வந்திருக்கிறது என நம்பலாம். ஆனால் ஆதியில் எந்த நூலிலிருந்து கபீரின் பாடல்கள் எடுக்கப்பட்டனவோ அந்த நூலில் பிழைகள் அநேகமாக இருந்திருக்கும். ஆகவே கிரந்த் சாகிப்பில் உள்ளவற்றையும் சந்தேகமில்லாமல் கபீருடைய பாடல்கள்தான் என்று கொள் வதற்கில்லை.

எல்லா சம்பிரதாயத்தவரும் கபீரைச் சமமாகப் போற்றுவ தால், பிறமதப் பிரிவினரின் அறநூல்களிலும் அவர் மொழிகள் உள்ளன. அவற்றில் ஒன்றை இங்கு குறிப்பிடலாம். ராஜஸ் தானில் இப்போது தாதூ மார்க்கம் என்பது பிரபலமாகியுள்ளது. முன்பு அது இன்னும் கூடப் பிரசித்தமாயிருந்தது. ஐந்து பக்தர் களின் திருவாக்குகளைக் கொண்ட அவர்களுடைய பிரபந்தத் திற்குப் ‘பஞ்சவாணி’ என்று பெயர். தாதூ, கபீர், நாமதேவர், ரைதாஸர், ஹரதாஸர் என்ற வரிசைக் கிராமத்தில் அந்த ஐந்து

பெரியார்களின் மொழிகள் அதில் உள்ளன. கபீர் பகுதியில் சுமார் 400 பதங்களும், ஸாகி எனப்படும் 800 ஈரடிகளும், ரமைனி எனப்படும் சில செய்யுட்களும் உள்ளன. 'கபீர் கிரந்தாவளி' என்னும் பெயரில் ஒரு திரட்டைக் காசி நாகரிகப் பிரசாரணி சபா வெளியிட்டிருக்கிறது. பரோதாவில் சீமாவில் உள்ள கபீர் பிரஸ்ஸும், பம்பாய் வேங்கடேஸ்வர பிரஸ்ஸும், கபீரின் ஈரடிகள் மட்டும் அடங்கிய நூல்களை வெளியிட்டிருக்கின்றன. இலகாபாத் பெல்வடியர் பிரஸ்ஸும், காசியில் கபீர் சௌராவும், 'சப்தாவளி' என்னும் பெயரில் பதங்களை மட்டும் வெளியிட்டிருக்கின்றன. சாந்திநிகேதனைச் சேர்ந்த க்ஷிதி மோகன் சென் அரும்பாடுபட்டுப் பெரும் தொகையான பதங்களைத் தேடி நான்கு தொகுதிகளாக வெளியிட்டிருக்கிறார். இவற்றில் நூற்றுக்கும் அதிகமான பதங்கள் கவியரசர் ரவீந்திரநாத் தாகூர் அளித்த ஊக்கத்தின் பேரில் ஆங்கிலத்தில் மொழிபெயர்க்கப்பட்டு, இந்திய நாட்டிற்கு வெளியேயும் கபீரின் பெருமை பரவலாயிற்று. தாகூர் கபீரால் பெரிதும் கவரப் பட்டார் என்பது பிரசித்தமாகும்.

ஆனால் பிரசுரிக்கப்பட்டுள்ள இந்த நூல்களில் எதையுமே, முற்றிலும் ஐயப்பாடு அற்றது எனக் கூறுவதற்கில்லை. கபீர் இயற்றாததும் நிறைய கலப்படம் ஆகியிருப்பதால், அசலையும் போலியையும் பிரிக்க முடிந்தால் அன்றி அவருடைய மகிமையைச் சரியாகப் புரிந்துகொள்ள இயலாது. இந்த நோக்கத்துடன் தான் என் ஆராய்ச்சியை ஆரம்பித்தேன். கணக்கற்ற கையெழுத்துப் பிரதிகளையும் பிரசுரிக்கப்பட்ட நூல்களையும் ஆராய்ந்து, சுமார் 1600 பதங்களையும், 4,500 சாகி (ஈரடி) களையும், 134 ரமைனிகளையும் சேகரித்தேன். இதில் கபீரின் படைப்பாக எவ்வளவை ஏற்கமுடியும்? கபீரின் சீடர்களோ அவர் இயற்றியது அனந்தம் என்றும், கங்கையாற்றில் உள்ள மணல்களைப்போல அவருடைய திருவாக்குகளும் எண்ண முடியாதவை என்றும் நம்புகிறார்கள். எனினும், கபீர் இறந்தவுடன் தொகுக்கப்பட்ட நூல்தான் பிறகு வந்த நூல்களுக்கு எல்லாம் ஆதாரமாய்த் தோன்றுவதால், அந்த நூலில் சேர்க்கப் பட்ட பதங்கள் யாவை என்பதை ஓரளவு நிர்ணயிப்பதற்கு முயற்சி செய்யலாம்.

கபீர் இயற்றியவைதான் என ஐயமின்றி கருதக்கூடியவையாக 200 பதங்கள், 20 ரமைனிகள், 750 சாகிகள் (ஈரடி) உள்ளன என்ற முடிவுக்கு நான் வந்தேன். 'கபீர் கிரந்தாவளி' என்ற

தலைப்பில் அலகாபாத் பல்கலைக்கழகத்தின் இந்தித்துறை இத்தொகுப்பை பிரசுரித்திருக்கிறது. இவையும், கபீர் முதலில் மொழிந்த வடிவத்திலேயே இருப்பதாகச் சொல்ல முடியாது தான். ஆனால் கபீரின் பெயரில் வெளியாகியுள்ள தொகுப்பு களில் எல்லாம் இவையே மிக ஆதார பூர்வமானவை என்று ஓரளவு கூறலாம்.

பலரைக் கபீர் தர்க்க வாதத்தில் வென்று அவர்களைத் தம் சீடர்கள் ஆக்கிக் கொண்டதாகவும், பக்தர்களுக்கு அவ்வப் போது உபதேச உரைகள் அருளியதாகவும் கபீர் மார்க்கத்தினர் கூறுகிறார்கள். இந்த தர்க்க வாதங்களும் உபதேசங்களும் அடங்கியவை எனக் கூறப்படும் பல நூல்களும் உள்ளன. உதாரணமாக, கோரக்நாதர், சங்கராச்சாரியார், தத்தாத்திரேயர், தேவதூதன், ஜோகஜீத், சர்வஜீத், ஹனுமான் வசிஷ்டர், ரைதாஸ், ஆகியோருடனான தர்க்க வாதங்களும், முகம்மது, சுல்தான், கருடர், அமர்சிங், வீர்சிங், ஜகஜீவன், கமால், தர்மதாஸ் ஆகியோருக்கு அளிக்கப்பட்ட உபதேச உரைகளும் உள்ளன. கபீருடைய உடன்காலத்தவர்களாய் இருக்க முடியாதவர் களையும், வரலாற்று மனிதர்கள் அல்லாதவர்களையும் கூட இப்பட்டியலில் காண்கிறோம். ஆனால் கபீரைப் பின்பற்றுவோர், எந்தக் காலத்திலும் எந்த இடத்திலும் தோன்றக் கூடியவர் தங்களுடைய குரு என்றும், எனவே எல்லாமே அவருடைய திருவாக்குகள்தாம் என்றும் பரிபூர்ணமாய் நம்புகிறார்கள். உண்மை என்னவாய் இருக்கக்கூடும் என்றால், கபீர் சித்தாந்தம் நிலைகொண்ட பிறகு, மற்ற மார்க்கங்களுக்கு எதிராக அதை ஸ்தாபிப்பதற்கு அவசியம் நேர்ந்த காலத்தில் இந்த நூல்கள் தோன்றியிருக்கக்கூடும்.

சில நூல்களில் கற்பனை சற்று அபரிமிதமாய் உள்ளது. உதாரணமாக 'கோரக் கோஷ்டி' என்னும் நூலில், கோரக்நாதர் தர்க்கம் புரிய வந்தபோது, தரையில் தம் திரிசூலத்தை ஊன்றி அதன் ஒரு முனையில் அவர் அமர்ந்து கொண்டு, இன்னொரு முனையில் அமர்ந்து வாதம் புரியுமாறு கபீரை அவர் அழைத்த தாகக் கூறப்படுகிறது. உடனே கபீர் தறியை ஒரு தட்டுத் தட்டி, நூல் ஒன்றை வானில் ஏற்றி அதன்மேல் அமர்ந்து கொண்டு, "நாதர் அவர்களே, திரிசூலம் தரையில்தானே உள்ளது. வாரும், வானத்து நூலில் அமர்ந்து வாதம் புரிவோம்" என்று அழைத் தாராம். அதே நூலிலிருந்து இன்னொரு உதாரணம் பார்க்கலாம். கோரக்நாதரின் கேள்வி:

தண்டம் கமண்டலம் தந்தவன் யார்,
மான் தோலும்தான் தந்தவன் யார்?
அரிநாமம் தந்தவன் யார்,
செப்மாலை தந்தவன் யார்?

கபீரின் மறுமொழி:

தண்டும் கமண்டும் பிரமன் தந்தான்,
சிவனே தந்தான் மான் தோலும்
குரவன் தந்தான் அரி நாமம்,
விட்டுணு தந்தான் செபமாலை

கோரக்நாத்:

மேலே, கீழே, நாலே கால்கள்,
இரண்டே காது அறிந்தால் சொல்வாய்,
இன்றேல் துறப்பாய் மாலையும் பையும்

கபீர்:

கீழே பூமி, மேலே வானம்,
நாலு திசை குளம்பே, கதிரும் மதியும் காதுகளே.
பையும் மாலையும் துறக்கேன் நான்,
இராமானந்த குருவே சரணம்.
கொம்பும் பையும் தண்டமும் என்றே
மேலே பேசில் உனக்கொன்று தருவேன்

இது போன்ற கூற்றுகளுடன் கபீருக்குச் சற்றும் தொடர்பு இருப்பதாகக் கருதுவது அபத்தமாகும். கோரக் மார்க்கம் முதலிய மதப் பிரிவுகளுடன் தங்களுடைய தர்க்கவாதங்களின் போது கபீர் மார்க்கத்தாரால் புனையப்பட்டவையே இது போன்ற சொற்கட்டுகள் என்பது தெளிவு.

தமது அந்திம காலத்தில் கபீர் காசியை விட்டு, இப்போது பஸ்தி ஜில்லாவில் உள்ள மக்ஹர் என்னுமிடத்திற்குச் சென்றார். அவர் இவ்வாறு செய்ததற்குப் பல காரணங்கள் கூறப்படு கின்றன. அவற்றில் ஒன்று வருமாறு: மக்ஹரில் இறப்பவருக்கு மோட்சம் கிடையாது என்று இந்துக்களிடையே ஒரு நம்பிக்கை உள்ளது. இதன் ஆதாரம் தட்சயக்ஞம் பற்றிய புராணக்கதை யாகும். இந்த இடத்தில்தான் தட்சன் தன் மருமகனாகிய சிவனை அழைக்காமல் வேள்வி செய்தான் என்று கூறப்படுகிறது. கணவன் அவமதிக்கப்பட்டதால் அவன் மகள் சதி சரீரத்தை விட்டாள். சிவன் பூத கணங்களை ஏவித் தட்சன் வேள்வியை

அழித்தார். மக்ஹரில் இறப்பவர் மறுபிறவியில் கழுதையாய்ப் பிறப்பர் என்று சிவன் சாபமும் இட்டார். இந்தச் சாபத்தை விலக்குவதற்காக கபீர் அங்கு இறக்கச் சென்றதாகக் கூறப்படு கிறது. மூட நம்பிக்கையைப் போக்குவதே அவர் நோக்கமாய் இருந்திருக்கலாம்.

உலக வாழ்வைத் துறக்கும் கபீரின் எண்ணம் தெரிந்த வுடன், அவருடைய கடைசி தரிசனத்தைப் பெற ராஜாக்களும், நவாபுகளும், பக்தர்களும் கூட்டமாய்க் கூடியதாக கபீர் மார்க்கத் தினரின் நூல்கள் கூறுகின்றன. காசி ராஜா வீரசிங் பகேலா, ரீவா அரசன் ராம்சிங், அயோத்தி நவாப், மகமத்தௌலா ஆகியோர் அவருடன் மக்ஹர் செல்ல அனுமதி வேண்டினர். அவரும் இசைந்தார். எல்லாருடனும் கபீர் மக்ஹரை அடைந்தவுடன் அங்கு கூட்டம் பெருகி, காசியோ களையிழந்து விட்டது. மக்ஹர் நவாப் பிஜ்லிகான் மக்கட் கூட்டத்திற்குச் சாப்பாட்டிற்கு ஏற்பாடு செய்தான். சிவசாபத்தால் அங்கு ஆறு வற்றிக் கிடந்ததால், பெருங் கூட்டத்திற்குப் போதுமான தண்ணீர் கிடைக்காமற் போயிற்று. கபீர் தம் ஆன்மீக வலுவால் ஆற்றில் மீண்டும் வெள்ளம் பெருகச் செய்தார். அமுதம் போல் நீர் இனித்ததால் அன்றுமுதல் அந்த 'ஆறு 'ஆமி' என்னும் பெயர் பெறலாயிற்று. பிறகு கபீர் மக்களுக்குத் தம் கடைசி உபதேச உரையை அருளிவிட்டு அருகிலிருந்த ஒரு பக்தரின் குடிலுக்குள் நுழைந்து கதவை மூடிக்கொண்டார். திடீரென வெடிச் சத்தம் ஒன்று வானை நோக்கிச் செல்வது காணப்பட்டது. கபீர் பூவுலகிலிருந்து விடை பெற்றுக்கொண்டு விட்டார் என மக்கள் உணர்ந்து ஜய ஜய கோஷம் செய்தார்கள்.

பிறகு ஒரு பூசல் கிளம்பியது. காசி ராஜாவும் இந்துக்களும் கபீர் தங்களுடைய குரு என்றும், இந்துச் சடங்குகளின்படி சடலத்தைத் தகனம் செய்ய வேண்டும் என்றும் கோரினார்கள். நவாபு பிஜ்லி கானும் முஸ்லீம்களும், கபீர் தங்களுடைய 'பீர்' என்றும், முஸ்லீம் போல அடக்கம் செய்யப்பட வேண்டும் என்றும் வற்புறுத்தினார்கள். வாக்குவாதம் முற்றி வாள்கள் உருவப்பட்டன. அப்போது ஒரு அசரீரி எழுந்தது. "கொல்வது வேண்டாம் நல்லவர்களே, குடிசைக்குள் பாருங்கள் முதலில்" என்றது அது. கதவைத் திறந்து பார்த்தால், குடிலில் உடலே இல்லை. சில மலர்களும் ஒரு வெள்ளைத் துணியும்தான் இருந்தன. உடலை விடாமலே சதேக முக்தி அடைந்து விட்டார் கபீர் என மக்கள் உணர்ந்தார்கள். பூவையும் துணியையும் இரு

சமயத்தினரும் பங்கு போட்டுக்கொண்டு தத்தம் முறைப்படி இறுதிக் கிரியை செய்தார்கள்.

கரீப்தாஸ் என்பார் சொல்வார்:

காசியை விட்டு மக்ஹருக்கேகி
கபீரர் பயணம் செய்தார்.
மலரும் துணியும் விட்டுச் சென்றார்,
மொழியும் விட்டுச் சென்றார்.

மலூக்தாஸ் சொல்கிறார்:

காசிவிட்டு குரு மக்ஹர் சென்றார், இருமத ஆசான்.
புதைப்போம் என்றும் எரிப்போம் என்றும்
கூறினர் மக்கள்.
பூதம் நாலும் கடந்தவர் சற்குரு,
மூப்பும் சாவும் அற்றவர்,
தாசன் மலூகன் நல்லுரை கேளாய்,
கபீராம் இறைவனைத் தேடு.

மண், நீர், தீ, வாயு ஆகியவை நான்கு பூதங்கள். இவை நான்கிற்கும் அப்பாற்பட்டவர் கபீர் என அவருடைய பக்தர்கள் நம்புகிறார்கள்.

உடலை முதலில் எரித்து பிறகு அஸ்தி மீது சமாதி எழுப்புவது என்பதாக, எரித்தல், புதைத்தல் ஆகிய இரண்டையும் ஈமச் சடங்கு வழக்கமாய்க் கொண்ட ஒரு குலத்தில் கபீர் பிறந்திருக்கலாம் என சில அறிஞர்கள் கருதுகிறார்கள். சமீபத்தில்தான் இந்து மதத்திலிருந்து இஸ்லாமிற்கு மாறியிருந்த சில வகுப்புகள் அந்தக் காலத்தில் இருந்தன. இரண்டுமதச் சம்பிரதாயங்களையும் அவை பின்பற்றி வந்தன. அந்த மக்கள் பெரும்பாலும் நெசவாளிகள் என்றும் கூறப்படுகிறது. கபீர் இந்தக் குலத்தில் தோன்றியவராய் இருக்கலாம். மிகவும் பழமையான நூல்களில் பூக்கள் பற்றியும் துணி பற்றியும் ஒன்றும் சொல்லப்படவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. அனந்த தாசரின் ‘பரிச்சய்’ நூலில், கபீர் மக்ஹருக்குச் சென்ற விஷயம் உள்ளது. ஆனால் மலர்கள் பற்றி ஒரு குறிப்பும் இல்லை.

கபீர் இறந்த இடம் பற்றி ஒரு ஐயமும் இல்லை என்றே தோன்றுகிறது. அவருடைய இரண்டு பதங்களிலேயே கடைசி நாட்களில் மக்ஹர் சென்றது பற்றிய குறிப்பு வருகிறது. அவற்றில் ஒன்றில் சிலவரிகள் வருமாறு:

கதி இனி யாதோ உரைப்பாய் இராமா,

மதியினை இழந்தே காசியை விட்டேன்.
வாணாள் முழுவதும் காசியில் இருந்தேன்
போம்நாள் வந்திட மஉஅரில் போந்தேன்.
ஆண்டு பல காசியில் தவமே புரிந்தேன்,
ஈண்டு மஉஅர் நகரில் மரணம் உறுவேன்.

மற்றொரு பதம் அவருடைய நம்பிக்கையைக் குறிக்கிறது.

உலகீர் நீரே மதியிற் சிறியீர்,
காசியின் கபீரன் சாகச் சென்றால்,
இராமன் பெருமை யாது?
பக்தியின் பெருமை சற்றும் அறிந்தார்
வியப்பும் கொள்வாரோ,
நீருடன் நீர் சேர்ந்தாற்போல் சேணியன்
அவனைச் சேர்ந்தானே,
கபீரன் சொல்வான், கேளீர் உலகீர் மறத்தல் வேண்டாம்.
இராமன் இருந்தால் நெஞ்சில், காசியும் மஉஅரும் என்னவாம்!

நீரில் நீர் கலப்பதுபோல் இராமனுடன் ஒன்றுவார்க்குக் காசியில் இறப்பதும் மக்ஹரில் இறப்பதும் ஒன்றே என்பதில் கபீருக்கு ஐயமே இருக்கவில்லை.

இவ்வாறு, கபீர் இறந்த இடம்பற்றி வெகுவாய்க் கருத்து வேற்றுமை இல்லை; ஆனால் இறந்த நாள் பற்றி நிறைய கருத்து வேறுபாடு உள்ளது. இது குறித்து நான்கு வெவ்வேறான கருத்துக்களைத் தெரிவிக்கும் நான்கு ஈரடிச் செய்யுள்கள் உள்ளன. அவற்றின் சாராம்சம் வருமாறு:

1. ஆயிரத்து ஐந்நூற்று எழுபத்தைந்தில் கபீர் மக்ஹர் சென்றார். மாக மாதத் தேய்பிறை ஏகாதசியில் உயிர் உயிருடன் கலந்தது.

2. ஆயிரத்து ஐந்நூற்று ஐந்தில் கபீர் மக்ஹர் சென்றார். அக்ரஹாயண தேய்பிறை ஏகாதசியில் உயிர் உயிருடன் கலந்தது.

3. ஆயிரத்து ஐந்நூற்று நாற்பத்தொன்பதில் கபீர் மக்ஹர் சென்றார். அகரஹாயண தேய்பிறை ஏகாதசியில் உயிர் உயிருடன் கலந்தது.

4. ஆயிரத்து ஐந்நூற்று அறுபத்தொன்பதில் சத்குரு பிரிந்தார், அன்னம் பறந்து சென்றது.

(எல்லா ஆண்டுகளும் விக்ரம ஆண்டுகள்)

முதல் செய்யுளின் சில பாடங்களில் "அக்ரஹாயண தேய்பிறை ஏகாதசி" என்றும் காணப்படுகிறது இவை எல்லாம் கர்ணபரம்பரையாய் வரும் பாடல்களே. இவற்றை இயற்றியவர் எவர் என்றும் தெரியாது. கபீர் மார்க்கத்தினர் முதல் பாடலை அதிகமாய் நம்புகிறார்கள். அதாவது விக்ரம ஆண்டு 1456 ஜ்யேஷ்ட மாதம் பௌர்ணமியிலிருந்து 1575 அக்ரஹாயண மாதம் தேய்பிறை ஏகாதசி வரை கபீர் ஜீவித்திருந்ததாக அவர்கள் கொள்கிறார்கள். இது, 119 வருடம் 5 மாதம் 27 நாள் ஆகும். கபீர் மார்க்கத்தைச் சேர்ந்த பாபு லஹ்னாசிங் என்பார் தம்முடைய 'கபீர் கஸௌடி' என்னும் நூலில், 1575ஆம் ஆண்டு மாக மாதம் தேய்பிறை ஏகாதசியான புதன்கிழமையன்று கபீர் மக்ஹருக்குச் சென்றதாய்க் கூறுகிறார், ஆனால் நாட்கணக்கு பார்த்தால் அது, செவ்வாய்க் கிழமையே ஆகிறது.

இந்தியத் தொல்பொருள் துறையில் உள்ள ஒரு ஆவணத்தில், கி.பி. 1450இல் (விக்ரம 1507) பஸ்தி ஜில்லாவில் ஆமி ஆற்றின் வலக்கரையில் கபீருக்கு ஒரு சமாதியை பிஜ்லிகான் எழுப்பினான் என்றும், 117 ஆண்டுகள் கழித்து கி.பி. 1567இல் நவாப் பிதாய்கான் அதைச் செப்பனிட்டான் என்றும் காணப்படுகிறது. ஒருவர் இறந்தவுடன் விரைவிலேயே சமாதி எழுப்புவதுதான் சாதாரண வழக்கமாதலால், மேலே கூறப்பட்டுள்ள இரண்டாவது பாடலில் உள்ளது போல, விக்ரம ஆண்டு 1505-லேயே கபீர் இறந்திருக்கக் கூடும் என இதன் மூலம் தோன்றுகிறது. எனவே முதல் பாட்டில் உள்ள 1575, முதலில், 1505 ஆகவே இருந்திருக்கும். நாளாவட்டத்தில் வாய் மொழியில் அதுவே மாறி 1575 ஆக மாறியிருக்கலாம். மற்றும் இந்தப்பாடல் எழுதப்பட்டுள்ள மொழி வழக்கில், 1575 என்னும் சொல்லை உச்சரிக்கையில், '1505க்குப் பின்' என்று உட்பொருள் தொனிக்கும் படியாகவே இருக்கும். 1505தான் சரி என்றால், கபீர் மறைந்த போது அவர் வயது ஐம்பதுதான்.

பழைய காலத்துப் பக்தர்கள் தங்களைப் பற்றி அதிகமாக ஒன்றும் சொல்லிக் கொள்வது கிடையாது. அப்படியே சொன்னாலும், தங்கள் எளிமையைக் காட்டுவதற்காகவே சொல்வார்கள். துளசிதாசர், சூரதாசர் போன்ற மகான்களைப் பற்றிக்கூடத் தெரிந்திருப்பது மிகச் சொற்பமே. சில சமயங்களில், பக்தர்களின் நெருங்கிய சீடர்கள் தங்கள் குருவின் வரலாற்றை எழுதி வைப்பதுண்டு. கற்பனை கலந்திருந்தாலும் உண்மையை அறிய அது உதவியாயிருக்கும். துரதிருஷ்டவசமாக கபீர்

சம்பந்தமாக இதுமாதிரி நூல் ஒன்றும் இல்லை. எனவே, உண்மையும் கற்பனையும் கலந்தவையாய், இதுவரை நாம் கண்டுள்ள விவரங்களிலிருந்து இரண்டே இரண்டு விஷயங்கள் தான் தெளிவாய்த் தெரிகின்றன. ஒன்று, கபீர் காசியில் வசித்த நெசவாளி என்பது; இரண்டு, அவர் மக்ஹரில் இறந்தார் என்பது.

ஆனால் மகான்கள் விஷயத்தில், பிறந்த தேதி, இறந்த தேதி போன்ற விஷயங்கள் எல்லாம் முக்கியம் அல்ல. எளிய குடியில் பிறந்த கபீர் மகா பக்தராய் விளங்கினார். பக்திரசம் சொட்டும் பாடல்களை விட்டுச் சென்றார். பிறப்பால் அன்றி செயற்கரிய செயலால் மாந்தர் பெரியார் ஆவார் என்பதற்குக் கபீரே சான்று. நாபாதாஸ் என்பவர், 'பக்தமால்' என்னும் நூலில், "வர்ணாச்ரம தர்மத்தையும், ஆறு தரிசனங்களையும் ஒன்றுமில்லாமல் செய்துவிட்டார் கபீர்" என்கிறார். இறைவனே கதி என்ற முழு நம்பிக்கையுடன் அவர் பற்றெல்லாம் துறந்து அவனுடன் ஒன்றி விட்டார். பேத நோக்கு நீங்கிப் பொது நோக்கு பெற்றுவிட்ட அவர் தம்மை அமரராகக் கருதினார். அவர் கூறுகிறார்:

நானே சாகேன், சாவதே உலகம்,
கண்டே கொண்டேன் வாழ வைப்பவனை,
அரி மரித்தால்தான் அடியேன் மரிப்பேன்.
அரி சாகாவிடில் நான் ஏன் சாவேன்?
கபீர் சொல்வான் மனம் மனத்தொடு கலந்தே,
ஆனந்தக் கடலில் அமர வாழ்வுற்றதே.

காலம் வென்ற அமரரே கபீர்தாசர். சத்தியத்தை நேருக்கு நேர் தரிசித்தார் அவர். பேரானந்தக் கடலை அடைந்தார்.

கபீர் பிரானின் பூத உடல் மறைந்திருக்கலாம். அவர் புகழ் மறையாது.

# கபீரின் சில படைப்புகள்

## பதங்கள்

(1)

என்றன் குருவே குளவிக் கிணையே
புழுவைக் கொணர்ந்து தன்னிற மளிப்பான்.

1. காலும் வேறே சிறகும் வேறே,
பற்பல நிறங்கள் வேறே;
சாதியுமேது பேதமுமேது,
தோட்டியும் ஆவான் தொண்டன்.
2. கங்கையில் கூடும் ஓடையும் கங்கை,
கடல் சேர் ஆறும் விரிகடல் ஆகும்.
3. அலையும் மனத்தை நிலையாய் ஆக்கி,
உள்ளே ஒடுங்கச் செய்தான்,
பூதங்கள் உள்ளே அப்பால் உளதை
நானே அறியவும் செய்தான்.
4. தளையா வினையும் அறுத்திட்டான்,
நீக்கினன் பந்தங்கள் யாவும்,
அடையாததையே அடைவித்தான்,
ஆக்கினன் இராமன் நிறமே.

(2)

விட்டலா ஆயர் கொழுந்தே, வதியும் உள்ளம் உன்னுள்ளே
இத்தனை நாளாயுன்னை பிரிந்தின்றுன்னை நினைந்தேனே.

1. வினை கோடிகளால் வீட்டைக் கட்டி,
மாயையில் நானே மகிழ்ந்தேனே,
எனையே நானே கட்டிக் கொண்டேன்,
கண்களும் ஏங்கும் உனை நோக்க.

2. தன்னையும் பிறரையும் சமமாய் நோக்கின்,
எல்லாம் தெரியும் சமமாகத்தான்,
நரகரி அடைய இதுவே நிலையே,
கபடம் கருவம் இரண்டும் விடுவாய்.

3. ஈங்கும் ஆங்கும் செல்வது வேண்டாப்
தலையில் பாரம் சுமத்தல் வேண்டாம்,
அரங்கன் சாரங்கதரனின் பெயராம்,
அமுதை உண்டு நித்தியம் தொழுவாய்.
(தல யாத்திரையும் நூலறிவுச் சுமையும் குறிப்பிடப் படுகின்றன).

4. சாதனை செய்யில் சித்தி கிடைக்கும்,
பின்னது கிட்டா தொழியினும் ஒழியும்.
மெய்யாம் ஞானம் கிட்டாதொழி யினும்,
வருந்தி எவரும் சாவது வேண்டாம்.

5. ஒவ்வொரு முயற்சியும் ஒவ்வொரு பலனை அளிக்கும்,
யோகம் அல்லது போகம்,
இவ்விரு பலனும் ஒருங்கே கிட்டும்.
இராமன் பெயரைப் பற்றிக் கொண்டால்.

6. ஏதோ பாட்டிதென்பது வேண்டாம்,
மெய்யாம் பிரம்ம விசாரம் சொன்னேன்,
ஆன்ம ஞான சாரம்தனையே அறியச் சொன்னேன்
அறிந்ததே கொள்வீர்.

7. இராமன் பெயரும் குணமும் பாடி,
அடித்தாமரையில் சித்தம் லயிப்பீர்,
ஐயம் வேண்டாம், கபீரன் சொல்வான்,
போகம் மோட்சம் இரண்டும் பெறலாம்.

(3)

இங்கென் தனமே அரியில் நாமம் — அதனை
மூட்டையில் கட்டலும் கடைசியில்
விற்பதும் இல்லையே.

1. நாமமென் கழனி நாமமென் தோட்டம்,
உன்றன் அடியேன் அடியே தொழுவேன்.

2. நாமமென் செல்வம் நாமமென் நிதியே,
உன்னை யல்லால் பிறிதே அறியேன்.

3. நாமம் என் சொந்தம், நாமமென் பந்தம்,
அந்திம வேளையில் அதுவே துணைவன்.

4. வறியன் பெற்றிடும் புதையல் நாமம்,
பசிக்கது விருந்தே கபீரன் சொல்வான்.

(4)

உன்னடியாரைக் காணுவதரிதே
காமக்ரோத லோப மோகம் விட்டவன்
அவனே அரியடி அறிவான்.

1. இகழும் புகழும் மதியாதவனும்,
மானாபிமானம் விட்டு நிற்பவனும்,
இரும்பும் பொன்னும் ஒன்றென்பானும்,
இறைவன் உருவாய் நிற்பவன் ஆமே.
2. ரஜகுண தமகுண சத்வகுணம் என்பர். யாவும்
உன்றன் மாயையாமே, நாலாம் நிலையைக்
கண்டான் எவனோ அவனே பரம பதமடைவானே.
(நாலாம் நிலை - துரிய நிலை)
3. சிந்தையில் மாதவன் எனும் மணி வைத்து,
பற்று விட்டரியின் கழலில் மகிழ்வான்,
சிந்தையும் யானெனும் செருக்கும் அறுப்பான்,
கபீரன் சொல்வான் அவனே பக்தன்.

(5)

அப்பப்பா இனி இவ்வூரில் உறையேன்,
காயத்தன் கேட்பன் கணந்தோறும் கணக்கு.
(காயத்தன்—கணக்கன்; காயத்தில் அதாவது உடலில் உள்ளவன் என்றும் பொருள்படும்).

1. உடலே ஊராம், தலைவன் சீவன்,
உழவர் ஐவர், மெய்கண் செவிநா
மூக்கென்றிவையே அடங்காப் பொறிகள்.
2. தருமன் கணக்குக் கேட்டிட்டகாலை,
மீதியும் நிறைய இருந்ததுவே, உழவர் ஐவரும் ஓடினர்,
உயிரைப் பிடித்தார் யமனின் தூதுவரும்.
3. கபீரின் உரையை நல்லீர் கேளீர்,
வயலின் கணக்கைத் தீர்ப்பீரே,
கட்டுண்டவனை விட்டே விடுவீர்,
பிறவிக் கடற்கவன் மீளாமே.
(வயல் - உடலைக் குறிக்கும்)

(6)

தேடுவீர் ஆன்மாவை நேயரே
கூடுவிட்டாவியுறும் எங்கே?

1. சனக சயதேவ நாம தேவர் பக்தரானாலும்
காணார் ஆன்மா.
2. சிவபிரம நாரத முனி என்பர், அவரும் அறியார்
ஆன்மா கதியை.
3. துருவன், பிரகலாதன், சேடன், வீடணன் கூட
அறியாதவர்தாம்.
4. உயிரின் மர்மம் அறிவாரில்லை, சுகன்தான்
உயிரோடிணைந்தவனாம்.
5. கோபிசந்தும் கோரக்கும் பர்த்துரு கரியும்
பெற்றாரின்பம்.
6. எல்லா உடலும் தானாகும் நிர்மல உயிருடன்
கபீரன் கலந்தான்.

(7)

ஆட்டம் இனியே ஆடேனே,
பாட்டும் விட்டதென் மனமே.

1. வெறுமை நிறைந்தது,
வேட்கைப் பாண்டம் உடைந்தது,
பிரமை மறைந்தது, காமச்சட்டை கிழிந்தது.
2. வேடம் பலவும் போட்டேன்,
வேண்டேன் இனியும் வேடம்,
விட்டுச் சென்றார் உற்றாரும்,
எஞ்சிய திராமன் நாமம்.
3. சஞ்சலம் நிச்சலமாகி, சர்ச்சைகள் யாவும் தீர,
பெற்றேன் முழுவதும் கூலி,
கபீரவன் திருவருளாலே.

(8)

அறிவாம் புயலே வந்தது நல்லீர்,
பிரமைத் திரையும் பறக்க,
மாயப் பந்தம் மறைய.

1. ஐயத் தூண்கள் தகர்ந்தன,
மோகச் சுவர்கள் விழுந்தன,

இச்சைக் கூரை இடிந்தது,
கெடுமதிப்பாண்டம் உடைந்தது.

2. காற்றின் பின்னே மழைதன்னில்,
திளைத்துக் கொண்டேன் உன்னடியேன்.

3. கதிரும் உதிக்க அதன் ஒளியில்,
கபீரின் இதயம் ஒளிர்ந்ததுவே.

**(9)**

காத்தபின் காகுத்தா சேர்த்திடுவாய் எங்கென்னை,
நீயருளும் வைகுந்தம் எங்குளதோ எவ்வகையோ.

1. நினைத்தால் எனைப் பிரிய-பின்-அருள்வாய் முத்திப்பேறு,
அனைத்தாம் பொருளில் நீ-எனில்-ஏய்ப்பாய் எனை ஏனே.

2. உரைப்பார் முத்திப்பேச்சு, உண்மை அறிவு வரும் வரையில்,
கபீர் காண்பதில் எல்லாம் உள்ளான் உள்ளத் துறைவானே.

**(10)**

திரும்பியும் நாம் ஏன் வருவோம்,
ஐம்பூதக் கட்டொழிய ஆண்டவனைக் காண்போமே.

1. மண்குணம் நீரும் பெற்றிட, நீரும் தீயும் சேர்ந்திட, தீ வளியாக, வளி வெளியாக, சகச சமாதி பெறுவோம்.

2. பல பொன்னகைகள் உருகிப் பசும் பொன் ஆவது போல,
உலகப் பற்றுகள் பொசுக்கிக் கலப்போம் பரவெளி தன்னில்.

3. நீரின் மேலே அலைபோல, நாமும் விளங்கிடுவோமே,
இன்பக் கடலே இறையோனே, அன்னம் அன்னத்தொடு சேரும்.

**(11)**

அலைவது விடுவாய் என்மடமனமே,
கையில் குங்குமம் எடுத்தாய், பின்னர் தீயில்
குளித்துச் சாவது திண்ணம்.

*(சதி, கையில் குங்குமத்துடன் உடன்கட்டை ஏறுவது மரபு— தீயினுக்கும் சாவுக்கும் அஞ்சாத கற்புடைய பத்தினியையும் வீரனையும் மெய்யான பக்தனுக்கு உவமையாகக் கொள்கிறார் கபீர்.)*

1. அச்சம் விட்டுக் களிக் கூத்தாடு,
உலோப மோக மயக்கம் விடுவாய்,
வீரன் சாவுக்கஞ்சிடுவானோ,
கற்பைக் காப்பாள் பாத்திரம் காக்காள்.

2. மரபும் சடங்கும் குடும்பப் பெயரும்,
கழுத்தைச் சுற்றும் சுருக்கேயாகும்,
பாதித் தூரம் சென்ற பின் திரும்பின்,
பாரது உன்னைப் பார்த்துச் சிரிக்கும்.

3. உலகம் யாவும் களங்கம்
உற்றதி ராமன் நாமம் சொல்வானே தூயன்,
கபீரன் சொல்வன் நாமத்தை விடாதே,
விழுந்தும் எழுந்தும் மேலே செல்வாய்

**(12)**

பேச்சைப் பற்றிச் சொல்வேன் என்னய்யா,
பேசிப் பேசித் தத்துவம் போச்சய்யா.

1. பேசிப் பேசிப் பெருகின விகாரம்,
பேச்சின் றேலோ ஆய்தல் எப்படி?

2. நல்லாரிடையே நன்றே சொல்லல் கேட்டல்,
அல்லாரிடையே மவுனம் நலமே.

3. ஞானிகளோடு பேசில் நன்மை,
அறியாரோடு பேசல் வீணே.

4. அரைகுடம் தளும்பும் அன்றே,
நிறைகுடம் தளும்பாதென்றும்.

**(13)**

மெய்யிது பொய்யே செருக்கும் ஏனோ
மரித்தால் மற்றவர் கணமும் வையார்.

1. பழம்பால் ஊட்டி வளர்க்கும் பிண்டம்,
உயிரே போனால் வெளியே எரியும்.

2. அழகுறப் பாகை கட்டிய மண்டை,
அங்கே காக்கை காட்டில் கொத்தும்.

3. எலும்பும் எலியும் கட்டை போலே,
மயிரும் எரியும் சருகைப் போலே.

4, அறிந்தும் மனிதன் விழித்திடமாட்டான்,
யமனின் பாசம் விழுகிறவரையில்.

**(14)**

மனமே தினப்பாட்டிற்கே திரிந்தலையாதே,
தினமே நல்வினை மேலும் மேலும் புரிவாய்.

1. குயவன் கொணர்ந்தான் ஒருவகை மண்ணே,
குழைத்துச் செய்தான் பலவகைப் பாண்டம்,
முத்தும் மணியும் ஒன்றில் வைத்தான்.
நோவைக் கொடுத்தான் மற்றொன்றிற்கே.

2. பட்டு பீதாம்பரம் ஒரு சிலருக்கே,
கந்தலுமில்லை பிற சிலருக்கே,
பஞ்சணைமஞ்சம் ஒரு சிலருக்கே,
கயிற்றுக் கட்டில் பிற சிலருக்கே.

3. கஞ்சன் கையில் பணமது சேர்ந்தால்,
மூடன் சொல்வான் எனதே என்றே,
யமனின் தண்டம் மண்டையில் விழுந்தால்,
கணக்கும் வெட்ட வெளிச்சமாகும்.

4. கபீரன் சொல்வான் நல்லீர் கேளீர்,
எனதே எனதே என்பது பொய்யே,
துணியைக் கூட அவிழ்த்துச் செல்வார்
அரைத் துணியையும் எடுத்துப் போகார்.

**(15)**

மூடா அரியின் பெயர் செபிக்காயோ,
திரும்பத் திரும்ப என்ன எண்ணுவாயே.

1. கோட்டையில் கள்ளர் ஐவர் உள்ளார்,
கொள்ளை யடிப்பார் அல்லும் பகலும்,
கோட்டைக்காரன் விழித்திருந்தாலே.
கொள்ளையடிக்கத் துணிவாரில்லை.

2. இருட்டில் விளக்குத் தேவையாமே,
காணாப் பொருளைக் காணற்கே,
காணாப் பொருளைக் கண்டதன் பின்னர்
விளக்கும் தேவை இல்லையே.

3. கண்ணாடியிலே காணுதல் வேண்டில்,
கண்ணாடியிலே தூய்மை வேண்டும்,
கண்ணாடியிலே களங்கம் பட்டால்,
தன்னுரு தன்னைக் காணுவதேது.

4. ஓதுவதென்ன உண்ணுவதென்ன,
வேதபுராணம் கேட்பதுமென்ன,
கற்பதனாலே பயனும் என்ன,
மெய்ப்பொருளறிய முடியாவிட்டால்.

5. கண்டு கொண்டானே என்பான் கபீரன்,
அவன் மனமறியும் அவனறிந்துற்றதை,
கண்டான் என்பதைப் பிறனறியாவிடில்,
குருடன் அவனை என் செய்வதாமே.

(16)

எனதென தென்றே வாழ்க்கை கழிந்தது,
வாழ்க்கை கழிந்தது அரி நினைவின்றி.

1. பன்னிரு வருடம் பாலனாய் ஒழிந்தன,
இருபது வருடம் தவமோ இல்லை,
முப்பது வருடம், உத்தமன் நினைவிலை,
மூப்பது வந்ததென் றேங்கிடுவாரே.
2. வற்றிய குளத்தில் அணைகட்டுகிறாய்,
பயிர் போன பின்னர் வேலி போடுகிறாய்,
திருடர் குதிரை கவர்ந்தேசென்றார்,
சேணம் உள்ளதென மூடனே சொல்கிறாய்.
3. கையும் காலும் தலையும் ஆடவே,
கண்ணில் நீரும் சதமும் ஒழுகவே,
நாவும் பேச்சில் உளறிக் குளறவே,
நல்வினை பற்றிப் பின் நீர் பேசுவீர்.
4. கபீரன் சொல்வான் நல்லீர் கேளீர்,
கட்டி வைத்த செல்வம் கடை வழி வாராது,
கோவல ராயன் அழைத்து விட்டாலே,
சொத்து சுகம் விட்டே ஓடுதல் வேண்டும்.

(17)

மனமே, உலகம் பார்வை மறைக்கும் பனியே
தலைமேல் தெளிவாய்த் தெரியும் யமனின் கயிறே

1. சிலையைத் தொழுதே இந்துவும் செத்தான்,
துருக்கன் ஹஜ்ஜு சென்றே,
சடையை வளர்த்துச் செத்தான் யோகி,
உன் கதி யாரும் அறியார்.
2. கவிதை படித்துக் கவிஞன் செத்தான்,
கேதார் சென்றே சன்யாசி,
மயிரை யழித்துச் சமணன் செத்தான்,
உன்னை யாரும் அறியவிலை.

3. செல்வம் சேர்த்துச் செத்தான் வேந்தன்,
கிடக்கும் தங்கம் புதைந்து,
வேதம் படித்துச் செத்தான் வேதியன்,
அழகைப் பார்த்து அணங்கு.

4. (நாதன்) ராமன் பேரின்றி எல்லாம் வீணே,
உடலைப் பார்த்துத் தெளிவீர்,
அரியின் பேரின்றி உய்ந்தார் யாரோ,
நெய்யும் கபீரன் கேட்பான்.

**(18)**

அடக்கல் இன்றி மாடுகள் மேய்ந்தன வயலை,
அல்லும் பகலும் விரட்டியும் ஓட மாட்டாவே.

1. விரும்பும் எல்லாவற்றையும் தின்னும்,
விருப்பம் போல திரியும்,
செருக்கில் யாரையும் மதியாவே,
குழம்பிப்-போனார் பலரும்.

2. அறிவென் பயிர், குரு பயிர்க் கொல்லை
பொம்மை, ஈரட்சரமே காப்பான்.
கபீரன் சொல்லுவான், பயிர் மேய ஒட்டேன்,
சமயத் தினிலே விழித்தேன்.

**(19)**

பித்தே காயமே பிராணன் சென்றால் ஏன் அழுவாய்,
அன்னம் சொல்லும், பைத்தியக்காயமே, எனக்கும்
உனக்கும் கூட்டில்லை.

1. உடலை அடைந்து மிக இன்புற்றேன்,
நித்தம் தேய்த்துத் தேய்த்துக் குளித்தேன்,
உடலே இதுவும் நாறிப்போகும்,
பெயர்கூடப்பின் எவரும் சொல்வார்.

2. சிவசனகாதியர் பிரமன் என்பார்,
ஆயிரம் தலையன் சேடன்,
எவரெல்லாம் உடல் தரித்தாரோ,
தரித்தாரில்லை உலகில்.

3. பாவம் புண்ணியம் இரண்டே
வாழ்க்கைத் துணைவர்,
அறிவீர் உலகீர், கபீரன் சொல்வான்,
ஐயனின் வழியை முழுதும் அறிந்தார் சிலரே.

**(20)**

நானே சாகேன், சாவதே உலகம்
கண்டே கொண்டேன் வாழவைப்பவனை.

1. தீயார் மடிவார், அடியார் வாழ்வார்
இராமன் என்னும் மருந்தை உண்டே.
2. அரி மரித்தால்தான் அடியேன் சாவேன்,
அரி சாகாவிடில் நான் ஏன் சாவேன்.
3. கபீர் சொல்வான் மனம் மனத்தொடு கலந்தே,
ஆனந்தக் கடலில் அமர வாழ்வுற்றதே.

**(21)**

எல்லாம் நலமே எங்கும் நலமே கண்டேனே,
கோவிந்தனையே கண்டே சாந்தி பெற்றேனே.

1. உடலில் உற்ற அக்கோடி உபாதை,
சகஜ சமாதி சுகமாய் மாறின.
2. யமனும் மாறி இராமன் ஆயினன்,
துக்கமு மழிந்து சுகமாயிற்று.
3. சத்துரு மாறி மித்திரர் ஆயினன்,
பொல்லார் மாறி நல்லார் ஆயினர்.
4. தன்னையறிந்து தானே மாறினான்,
அவனை விட்டன முத்தாபங்களும்.
5. மனமே மாறி அழிவிலாதாயிற்று,
உயிரோடிறந்தால் அதையே அறிவாய்.
6. கபீரன் சொல்வான் கலந்தேன் இன்பத்தில்,
அஞ்சல் அச்சுறுத்தல் இரண்டும் விட்டேன்.

**(22)**

துணிநெய்து கொள்ள ராமுராயி வந்தாள்,
நெசவாளி வீட்டை விட்டே ஓடிப் போனாள்.

1. நவகஜம், பத்து கஜம், கஜம் பத்தொன்பதும்
கொண்டே போட்டான் ஒரு தறியை,
எழுநூல் முடிகள் எழுபத்திரண்டு,
அகலம் பெரிதும் ஆயிற்றே.
2. இயலாததனை அளத்தல் நிறுத்தல்,
உண்ணும் மாவு இரண்டரைச் சேர்,

இதிலொரு கால்சேர் குறைந்தேவிட்டால்,
வீட்டுக்காரி முணு முணுப்பாள்.

3. முழுநாள் வேலையில் எசமான் மகிழ்வான்,
மூன்றிலோர் பங்கு கூலி திறையாய்ச் செல்லும்,
ஈரத்தறியை வீட்டில் விட்டே,
வெறுத்தோடி விட்டான் நெசவுக்காரன்.

4. கோணலுற்ற நாடா இனி உழைக்காதே,
நூலதில் சிக்குமே, கபீரின் சொற்கேள்:
அதை விட்டு மூடா, ராமனைத் துதிப்பாய்.
(ராமுராய்-வழக்கமாக வேசிக்குத் தரப்படும் ஒரு பெயர்)

**(23)**

இராமனை நினைப்பாய் பித்தனே,
உன்னுடல் இராதே நித்தமே.

1. இச்செல்வம் யார் செல்வம்,
யார் கூடத்தான் செல்லுமடா,
பொல்லானே சிந்திப்பாய்,
சந்தை போலே மறையுமடா.

2. பொன்னூராம் இலங்கைபுரி,
மண்ணில் மண்ணாய் ஆனதடா,
தலைபத்தான் மாட்சியதும்,
பொக்கெனக் கணத்தில் போனதடா.

3. பன்னிரு யோசனை தன்னில்,
பாய் விரித்ததிலே குடை பிடித்து
நடந்தானே துரியோதன், அவனும்
மண்ணாய்ப் போனானடா.

4. சொல்லுகிறான் கபீர் கூவி,
நமதிங்கெதுவும் இல்லையடா,
இராக் கனவு கலைவது போல்,
வாழ்விங்கதுவும் மறையுமடா

**(24)**

நாலு நாள் தன்னுடைய தமுக்கையடித்துச்
செல்வானே, கவிழ்த்திட்ட கட்டிலில்
மண்ணுக்குச் செல்வான்,
ஒன்றும் கூடச் செல்லாதே.

1. படியினிலமர்ந்து பத்தினி அழுவாள்.
பெற்றவள் வருவாள் வாசல்வரை,
காடுவரை சுற்றம் வருமே கூட.
அதன் பின் அன்னம் தனி செல்லும்.
2. இந்தச் சொத்தும் பிள்ளையும் ஊரும்,
இனி பின் திரும்பக் காண்பதிலை,
கபீரன் சொல்வான் தொழுதல் இன்றி,
மனிதன் வாழ்க்கை வீண்தானே.

(25)

மனமே திரும்பி மனத்தில் கலந்தது,
குருவின் அருளால் அறிவும் வந்தது,
முன்னால் அறிவற்றிருந்தேனே.

1. மூச்சைத் திருப்பி அறுசுழி பிளந்து,
சூனிய நிலையை மனம் பெறுமாம்,
போக்கும் வரவும், பிறப்பும் இறப்பும்,
அறுப்பவனைத்தேடு. வைராகி.
2. அருகிலும் தொலைவில், தொலைவிலும் அருகில்,
இருப்பான் அவரவர் பார்வைபோல்,
வழியும் தடத்தில், மேல் செலும் நீரை,
குடிப்போர் யாரோ அவர் அறிவார்.
3. உன் நிர்குணக் கதை யாரிடம் சொல்வேன்,
யாரதை அறியும் அறிவுள்ளார்.
கபீர் சொல்வானே குரு தந்த சுடரின்
ஒளியினைக் காண்பர் வெகு சிலரே.

(26)

மனமே இராட்டை நாவே பஞ்சாம்,
அரியின் நாமத்தைப் பாவாய் நூற்பாய்.

1. இருநூல் கொண்டு நாலுமுளை கட்டி,
இராட்டை எளிதில் சுற்றியதாம்.
2. அறுதிங்கள் நூற்று, பன்னிரு நாளும் சிட்டத்தில் சுற்ற,
அனைவரும் பார்த்தே மெச்சினராம்.
3. கபீரும் சொல்வான் நூல் நூற்றேன், இராட்டை அல்ல,
இறை பதம் தருகிற கருவியதாம்.

(27)

நந்த நந்தனன் முகுந்தன் என்பீர்,
நந்தன் யார்தன் மைந்தன் பின்?
விண்ணும் மண்ணும் இல்லாப் பொழுதில்,
நந்தன் இவன்தான் எங்கிருந்தான்?

1. எண்பத்து நான்குலட்சம் யோனியில்
பிறந்து பிறந்து நந்தன் நொந்தான்,
பக்திக்குப் பரிந்து பிறந்தான் கண்ணன்,
துர்ப்பாக்கியனும் பெற்றன் பேறு.
2. பிறப்பும் இல்லான் இறப்பும் இல்லான்,
துன்பம் இல்லான், மாசும் இல்லான்,
தாயும் இல்லான், தந்தையும் இல்லான்,
தாசன் கபீரன் நாதன் அவனே.

(28)

பற்று நான் அற்றேன்,
வந்த உயிர் எங்கே சென்றதென எண்ணியே,

1. விண்ணில் வெளியாம் கீழே வெளியாம்,
பத்துத்திசையிலும் வெளியேயாமே,
இன்பத்தின் ஊற்று, என்றுமுளானே,
பானை உடையும், வெளி போகாதே.
2. ஐம்பூதத்தால் உடலுண்டாகும்,
ஐம்பூதங்கள் தோன்றியதெங்கே,
வினை கட்டுண்டார் சீவர் என்பீர்,
வினை செய்விப்பான் யாரே சொல்வீர்.
3. அரியில் உடலே உடலில் அரியே,
அனைத்திலுமுள்ளான் நீக்கமே இன்றி,
சொல்வான் கபீரன் என்ன வந்தாலும்
அரி நாமத்தை விடவே மாட்டேன்.

(29)

கபீரன் கெட்டான், இராமா அபயம்,
நீ கெட்டுப் போதல் வேண்டாம் தம்பி.

1. சந்தன மரத்தின் அருகே ஒரு தரு,
கெட்டுக் கெட்டுச் சந்தனமாச்சு.

2. பரச மணியினை இரும்பும் தொட்டது.
கெட்டுக் கெட்டுப் பொன்னேயாச்சு.
3. கங்கையாற்றில் கலந்திட்ட நீரும்,
கெட்டுக் கங்கை நீரேயாச்சு,
4. கபீரன் சொல்வான், ராமா என்பான்
கெட்டுக் கெட்டி ராமனேயாவன்.

**(30)**

ஆசனம் மூச்சுப் பயிற்சியை விடடா,
விட்டே கபடம் நித்தம் அரியைத் தொழுமூடர்.

1. கொம்பை மின்னத் தேய்ப்பதுமேனோ,
ஓயா துடம்பில் சாம்பலுமேனோ.
2. அவனே இந்து, அவனே முஸல்மான்,
ஒழுக்க நெறியில் நின்றான் யாரோ.
3. தியானம் செய்வான் யோகி உன்மனியில்
பிராமணன் சொல்வான் பிரமஞானம்.
4. கபீரன் சொல்வான் வேறெதுவும் வேண்டாம்.
இராமனைச் செபித்தால் எல்லாம் கிட்டும்.

**(31)**

மெய்யின்பம் பெறுவாயே,
ஆன்மா ராமன் நிறம் பூசி.

1 வனவாசத்தால் என்ன பயன்,
மனதின் விகாரம் அழியாவிட்டால்?
காடும் வீடும் ஒன்றென்பார்,
உலகில் அவர்கள் வெகு சிலர் தானே.
2. சடையேன், சாம்பல் பூசுவதேனோ,
குகையில் தானே வசிப்பதுமேனோ?
அகத்தை வென்றால் ஜகத்தை வென்றீர்,
விடயப் பற்றை நீவிர் விட்டால்.
3. கண்ணில் மையைத் தீட்டுவர் மக்கள்,
கண்ணின் கவர்ச்சி கூட்டுவதற்கே,
மனதைக் கவரும் கண்தான் எதுவோ,
அதுவே அழகிய கண்ணே யாகும்.
4. கபீரன் சொல்வான் குரு கருணையால்
அருளினான் ஞானம்,

நெஞ்சினில் அரியை வைத்தேன்
இனி மனம் சென்றிடாதெங்கும்.

**(32)**

உன்பேர் என்னுயிர், அல்லா ராமா,
அடியேனுக்கே தயை புரிவாயே என்அய்யா!

1. தலையைத் தரையில் முட்டுவதாலென்,
உடலை நீரில் முழுக்குவதாலென்?
கொல்வாய், நல்லான் போலிருப்பாயே,
தன் குணத்தையே மறைத்திடுவாயே.
2. செபமும் என்ன, சடங்கும் என்ன,
மசூதியில் மண்டி இடுவது மென்ன,
நெஞ்சில் கவடின் நமாஸ¬ சொல்வாய்,
என்ன பயன் பின் ஹஜ்ஜ¬ப் பயணம்.
3. பார்ப்பான் ஏகாதசி நோன்பிருப்பான்,
காஜி ரம்ஜான் மாதம் நோன்பாம்,
பதினொரு திங்கள் பயனற்றிருக்க,
பலனெல்லாமும் ஒரு திங்களிலோ?
4. குதாதான் மசூதியில் இருந்திட்டாலே,
ஊரின் மற்றப் பகுதியில் எவனோ?
தலங்கள் சிலைகளில் இராமன் இருந்தால்,
இரண்டிலுமவனைக் கண்டார் யாரோ?
5. அரியின் வாசம் கிழக்கேயாம்,
அல்லா முகாமும் மேற்கேயாம்,
நெஞ்சில் தேடு நெஞ்சில் தேடு,
ராமனுமங்கே ரகீமுமங்கே.
6. ஆறாய்ப் பெண்ணாய்ப் புவியில் பிறந்தவர்
யாவரும் உன்றன் உருவம் தானே,
அல்லா ராமனின் குழந்தை கபீரன்.
அவனே என் குரு அவனே என்பீர்.

**(33)**

நாவில் விட்டு நாரணன் கண்ணில்,
என்னுள்ளத்தில் கோவிந்தா,
கூற்றன் கணக்குக் கேட்கையில்தான்,
முகுந்தா என்பீர் எதற்காமோ?

1. நீ பார்ப்பனன் நான் காசி நெசவாளி,
என் ஞானத்தை நீயறியாய்,
நீ யாசித்தாய் பூவேந்தரிடம்,
நான் ராமனைத் தொழுதேனே.

2. முந்தைப் பிறவியில் நானும் வேதியன்,
தவமது செய்யாதொழிந்தேனே, இராமன்
சேவையை மறந்தேன் என்னைப் பிடித்தே
சேணியனாக்கி விட்டான்.

3. பசு நான் பசுவை மேய்ப்பவன் நீயே,
பிறவி தோறும் காவலனும், என்றும்
வெளியே மேய்த்ததே இல்லை,
எவ்வாறாகிய எசமான் நீ!

4. வாழ்க்கைக் கடலில் மூழ்கிடும் நீயே,
வழியைத் தேடு கரையேற,
தோணி ஆக்குவாய் இராமன் பெயரை,
இதுவே என்றன் உபதேசம்.

**(34)**

வேதியா ஏன் கெடுமதியில் உழல்வாய்,
சுற்றத்தோடழிவாய் ராமனைத் தொழாமே.

1. வேதபுராணம் படித்தென்ன பயனே,
சந்தனக் கட்டை கழுதை மீதேற்றல்,
இராமன் பெயரின் பெருமையை அறியீர்,
கரையேறுதலும் எவ்வண்ணம் ஆகுமோ.

2. உயிர் வதை செய்வதே தர்மம் என்பீர்,
அதர்மம் எனப்பின் எதையே சொல்வீர்,
முனிவர் என்றுமே சொல்லிக் கொள்வீர்,
கொலைஞர் எனப்பின் எவரைச் சொல்வீர்.?

3. மனத்தின் இருட்டால் தாமே அறியீர்,
பிறருக்கென்ன போதிப்பீர்,
கல்வியை விற்பீர் பணத்திற்காக,
வாழ்க்கை வீணாய் ஆயிற்றே.

4. நாரதன் சொன்னான், வியாசன் சொன்னான்,
சுகனையும் சென்று கேட்பீரே,
கபீரும் சொல்வான், ராமனைத் தொழுவீர்,
இன்றேல் மூழ்கிப் போவீரே.

(35)

சொல் வைதீகா தூயதாம் இடத்தை,
நானுட் கார்ந்து சாப்பிடத்தானே.

1. தாயும் தீட்டே தந்தை தீட்டே,
தீட்டேதான் குழந்தையும்,
வருவது தீட்டே, போவது தீட்டே,
சாவதும்தான் தீட்டாகும்.
2. அக்கினி தீட்டே, நீரது தீட்டே,
சமைக்குமிடம் தீட்டாகும்,
அன்னம் போடும் கரண்டி தீட்டே,
தீட்டுமுண்ணும் தீட்டையே.
3. சாணம் தீட்டே, அடுக்குள் தீட்டே,
வரைந்த கோடும் தீட்டாகும்,
கபீரன் சொல்வான், அழுக்குகள் விட்டே
அரியைத் தொழுகின்றவன் தூயன்.

(36)

வாரேன், போகேன், இருக்கேன், பிறக்கேன்,
குருவின் கூட அமுதம் குடிப்பேன்.

1. மாலை உருட்டுவர், தஸ்பி உருட்டுவர்,
இருவர் செய்வதும் தொழிலே காணீர்.
2. காசி செல்லுவர், மெக்கா செல்லுவர்,
இருவர் கழுத்திவும் சுருக்கே காணீர்.
3. கபீரன் சொல்வான் நரர்காள் கேளீர்,
பிறருக்குரியன் அல்லேன்,
எவரும் எம்மவரும் அல்லார்

(37)

இறப்பது யாரே, பிறப்பது யாரே,
நரகும் விண்ணும் செல்வது யாரே.

1. பூரணத்திருந்தே பிறந்தன பூதம்,
ஐந்திலும் உறைவான் அவனே ஒருவன்
மறைந்தன பூதம் பூரணமானான்,
எல்லையும் திக்கும் பின்பே இல்லை.
2. சட்டியில் சலமே, சலத்தில் சட்டியே,
உள்ளும் வெளியும் சலமேயாகும்,

சட்டி உடைந்தால் சலமொடு சலமே
சேரும் சொல்வர் ஞானியர் இதனை.

3. ஆதியும் வெளியே, அந்தமும் வெளியே,
நடுவும் வெளியே, வினையும் பற்றுமோ,
வீணே ஐயம், கபீரன் சொல்வான்

(38)

ஏனோ வேதியா அரிபேர் சொலலாய்,
ராமன் பெயரைச் சொல்லாவிட்டால்
நரகினில் உழல்வாய்.

1. காயத்திரியும் வேதமும் ஓதுவான்,
பிழையினைச் செய்வதுமேனோ,
வையம் முழுவதும் வீழும் உன்னடியில்
உயிர்வதை செய்வதுமேனோ.

2. உயர்ந்தான் உண்பான் தாழ்ந்தாரோடு,
உண்ணுவன் இன்னா செய்தே,
அமாவாசையில் பிச்சை எடுப்பான்,
விளக்குடன் கிணற்றில் புகுவன்.

3. மறையோன் நீயே நெசவோன் நானே,
நம்மில் ஏதே ஒப்பீடு,
இராமன் பெயரால் உய்ந்தேன் கபீரன்,
மறையை நம்பிக் கெட்டாய் நீ.

(39)

அய்யன் நினைவின்றியே கெட்டனர் புல்லர்,
உய்ய நான் நாடுவோர், வலையில் பட்டவர்.

1. இனிதே போகம் பிறிதே இல்லை என்பான் யோகி,
பெற்றோம் சித்தி என்பர் மொட்டைத் தலையர், சடையர்.

2. புலவர், வீரர், கவிஞர் வள்ளல், தாமே பெரியார் என்பர்,
அரியின் சரணம் துறக்கும் மக்கள், தோன்றியவாறே மறைவர்.

3. இடத்தே வலத்தே விகாரம் விட்டே,
பிடிப்பீர் அரியின் பதமே,
கபீரன் கேட்பான், இனிப்பை உண்ட ஊமை
இயம்புவன் யாதே.

**(40)**

உலகீர் நீரே மதியிற் சிறியீர்,
காசியில் கபீரன் சாகச் சென்றால்,
இராமன் பெருமை யாது?

1. பத்தியின் பெருமை சற்றும் அறிந்தோர்,
வியப்பும் கொள்வாரோ,
நீருடன் நீர் சேர்ந்தாற்போல் நெய்வோன்,
அவனைச் சேர்ந்தானே.

2. கபீரன் சொல்வான், கேளீர் உலகீர்,
மறத்தல் வேண்டாமே,
இராமன் இருந்தால் நெஞ்சில்,
காசியும் மக்ஹரும் ஒன்றாமே.

## ரமைனிகள்

**(1)**

முதலில் மனதில் நினையவனை,
தனக்கே உவமை இல்லாதானை.

அவனை யாரும் கடந்தாரில்லை,
முதலும் முடிவும் இல்லாதவனே.
உருவா அருவா அறிந்தாரில்லை,
எடையது மறிய இயலாதவனே.
பசிதாகம் வெயில் நிழலின்பதுன்பம்,
நீத்தே எதிலும் நிறைவானவனே.

எல்லையில்லா பிரமத்தை,
அறிவே உருவாய் உள்ளானை
உள்ளாலுன்னிக் கண்டேனே,
இராமனுக்கில்லை இணை யாரும்.

**(2)**

ஐயனைத் துணைவன் ஆக்கி அறுத்திடுவாய்
இன்பமும் துன்பமும்.
தசரதன் மகனாய் வந்து இலங்கை கோனைக்
கொன்றவன் அன்றாம்.

தேவகி வயிற்றில் வந்து, யசோதை மடியில்
வளர்ந்தவன் அன்றாம்.
கோவலர் தோழன் அன்றே, கோவர்த்தனத்தைத்
தூக்கவும் இல்லை.
வலியை ஏய்த்த வாமனன், வேதமும் புவியும்
மீட்டவன் அல்லன்.
கண்டக ஆற்றின் சாலிக் கிராமம், மச்சமும்
ஆமையும் அல்லன்.
'பதரியில் நிட்டையுமில்லை, அரசொழி பரசு
ராமன் அல்லன்.
துவரையில் உடல்விடவில்லை, சகந்நாதப்
புரிப்பிண்டம் அல்லன்.

இதெல்லாம் பிழையே கபீரன் கருதிச் சொல்லுவான்,
இததெல்லாம் கடந்து நின்றான் உலகைத் தாங்குவான்.

**(3)**

கலியில் 'கல்மா' போதித்தவரும், குதாவின் ஆற்றல்
கண்டாரில்லை.
கரீமின் அருளால் நடக்குமெல்லாம், குரானும் மறையும்
சூனியமாமே.
கருவில் தோன்றியதெதுவும் பொய்யே, பெயரைக்
கொண்டதும் பொய்யேயாமே,
'சுன்னத்து' முப்புரி நூலும் பொய்யே, இந்துவும்
துருக்கரும் மெய்யறியாரே.
மனத்தை அடக்கும் வழியறியாரே, மதியை இழந்து
மதம் என்பாரே.

காற்றும் நீரும் கொண்டே சுகத்தைச் சிருட்டி செய்தானே,
பாழில் ஓசை ஒடுங்கச் சாதிப் பேச்சும் ஏதாமே.

**(4)**

மறையை ஓதி மறையோன் கெட்டான்,
தன்னுடை மர்மம் தானே அறியான்.
சந்திதர்ப் பணமும் சடங்குகள் ஆறும்,
இவனுடை இல்லில் பெரிதாய் நடக்கும்.
நாலு யுகமும் காயத்திரியைச் செபித்தார்.
யாரே உய்ந்தார் கேட்பீர்.

தன்னை யாரும் தொட்டால் முழுகுவன்,
இவனில் யாரோ இழியர் கேட்பீர்.
தன்குணம் பெரிதெனச் செருக்குக் கொள்வான்,
செருக்கது மிகுந்தால் நன்மை உண்டோ.
செருக்கொறுப்பானென நாமம் கொண்டான்,
இவனது செருக்கைப் பொறுத்திடுவானோ.

குலத்தின் பெருமை என்னுதல் விட்டு,
நிருவாணப்பதம் தேடுவாய்,
விதையும் முளையும் அழிந்தே போயின்,
விதேகப் பதமது வருமே.

**(5)**

பற்றுவாய் அழிவிலா இராமன் பெயரை,
அரியை விட்டுப் பிறனை நாடாய்.
விட்டிலே ஆவாய் எங்கு சென்றாலும்,
மோகத்தீயில் அழிதல் வேண்டாம்.
உத்தமன் பெயரை உள்ளத்தில் கொண்டால்,
குளவி புழுவின் பேதம் போமே.
பிறவிப் பெருங்கடல் எல்லையும் அற்றதே,
உள்ளுவாய் அதனை நீந்தும் வழியை.
மனத்தின் விகாரங்கள் அலைபோல் மோதுமே,
கடலைக் கடக்கும் வழி தெரியாதே.

பவக் கடல் ஆழம் அளப்பரிதே,
கடக்கத் தோணி இராமன்தான்,
அரியைச் சரணம் அடைவாயே,
ஆழ்கடல் குட்டை ஆகிவிடும்.

## ஈரடிப்பாக்கள்

1. என்பால் தரஉள திராமன் நாமம் ஒன்றே,
எதுதந் தால் குரு உவப்பர் நானறியேனே.

2. அனந்தம் குருவின் மகிமை,
அனந்தம் அவர் செய் நன்மை,
அனந்தக் கண்கள் தந்தார்,
அனந்தப் பொருளைக் காண.

3. இரவில் பிரிந்தால் பறவை காலையில்
மீண்டும் கூடும்.
அரியைப் பிரிந்தால் அல்லோ பகலோ
கூடுவதில்லை.

4. விரகம் விரகம் எனல் வேண்டா, விரகம் மனத்தின்
அரசாமே,
விரகம் அறியா உள்ளந்தான் என்றும் மயானம்
ஆகிடுமே.

5. வழியை நோக்கி நோக்கி, விழிகள் சோர்ந்தன ஐயே,
நாமம் சொல்லிச் சொல்லி நாத்தமும் பேறிய தையே.

6. அல்லும் பகலும் கண்ணீர் மல்கி, வெள்ளம்போல
பாய்கின்றதுவே,
குயில்போல் கூகூ என்றே கூவும் என்னை நீயே
அழைப்பது மென்றோ.

7. நல்லார் கண்ணீர் பொல்லார் கண்ணீர்
இரண்டும் ஒன்றே,
கண்ணதில் உதிரம் வழிந்தால் உளதே நெஞ்சில்
அன்பே.

8. துயிலும் ஏனோ கபீரன் கேட்பான், விழித்துச்
சொல்உன் துயரம்,
காட்டில் முடிவார் தமக்கின் துயிலும் உண்டோ.

9. நீ நீஎன்றே நீயாகி, நானே அல்லேன் ஆனேனே,
உன்னில் நானே ஒன்றாகி, காணுவதெல்லாம் நீயானாய்.

10. ஞானிப் பத்தன் நித்தியம் சாவான்,
அரியணை அமர்வான் அறிவிலி,
நன்றும் தீதும்அறியான், வயிற்றை
நிரப்புவ தொன்றே அறிவான்.

11. வெண்துணி போல்வான் பக்தன்,
மாசதில் சேருவதரிதே,
கருந்துணி போல்வான் தீயன்,
எங்கும் விரித்திட லாமே.

12. ஆரும் காணேன் இவ்வுலகத்தில், கேண்மை கொண்டிட,
பாரில் யாவரும் தத்தம் தீயில் எரியக் கண்டேன்.

13 ஊறிலா வீரர் பலர் கண்டேனே,
புண்ணுள்ளார் எவரும் காணேன்,
புண்ணுடைவீரர் இருவர் கூடில்,
இராமன் பத்தி பெரிதாகும்.

14. தீப்பந்தம் கையில் ஏந்தி, என்னில்லம் எரித்திட்டேன்,
என்னோடு செல்வார் இல்லம், எரித்திடுவேன் இனியானே.

15. எனதாம் இனி அல்லேனே, உனதே எல்லாமே
உனதே உனக்கீந்தாலே, ஏதே என் செயலே.

16. நாபியில் கத்தூரி இருக்கக் காடெல்லாம் மான் தேடும்,
நெஞ்சினில் இராமன் இருக்கக் காணாரே உலகத்தார்.

17. தேடித் தேடிக் கபீரன் தன்னையே இழந்தானே,
கடலில் கலந்த துளியைக் காணுவ்தும் ஆகிடுமோ.

18. மெய்க்குள் ஒடுங்கிய துள்ளம், வெளியில் செல்லுவதில்லை.
தீயும் தணிந்திடப் பிழம்பு தண்ணீர் ஆகியதன்றோ.

19. நாதம் பரவி தேகத்தில், தந்திகளின்றி யாழிசை கூட்டும்,
உள்ளும் வெளியும் ஆனந்த ஒலியேயாகி மயக்கம் ஒழியும்.

20. கங்கை யமுனை ஆறுகளிடையே உளதே சகஜ
சூனியக் கட்டம்,
அங்கே கபீரன் மடமே சமைத்தான்,
அங்கு செல்வழியை முனிவர் தேடுவர்.

(இடை, பிங்களை நாடிகளிடையே உள்ள சுழி முனை நாடியில் சகஜ சூனியக் கட்டம் இருக்கிறதெனப் பொருள் கொள்ள வேண்டும் என்று உரையாசிரியர் கூறுவர்).

21. கண்ணை நான் மூடுவேன்,
உடனே கண்ணுக்குள்ளே வந்திடுவாய்,
பின்னர் நான் யாரையும் காணேன்,
நீயும் காண விடமாட்டேன்.

22. நரகும் புகுவேன், நரகுக் கஞ்சேன்,
அன்பே நீ இலா சொர்க்கம் வேண்டேன்.

23. அரிரசம் குடித்தால் வெறி குறையாது,
மெய்யுணர் விழந்தே அலைந்து திரிவர்.

24. மரத்திலன்பு காய்க்குமோ,
கடையில் விலைக்குக் கிடக்குமோ,
வேண்டிலரசன் ஆண்டியும்,
தலை கொடுத்துப் பெறலாமே.

25. பத்தே நாள்தான் அடிப்பாய் தமுக்கு கபீர் சொல்வானிவ்
வூரும் சந்தும் பின்னிங்கு வந்து காண்பது மேது.

26. மண்ணால் செய்தது மெய்யெனும் பாண்டம்
நாலுநாள் ஆடிப்பின் மண்ணொடு மண்ணே.

27. அரிதே மனிதப் பிறவி, மீண்டும் மீண்டும் வாராதே,
பழுத்தே உதிர்ந்த பழம் கிளையில் மீண்டும் ஒட்டாதே.

28. கருவம் வேண்டாம் கபீரன் சொல்வான்,
முடியைப் பிடித்தான்
கூற்றன் கொல்வான், வீட்டிலோ வெளியிலோ
தெரியாதுனக்கே.

29. முத்தும் மணியும் இழைத்துக் கட்டிய அரக்குக் கோயில்,
பத்துநாள் கூத்துப்போல் நாளையே அழிந்தே போகும்.

30. பாழாம் ஊரில் ஓட்டைப் பானைகள்,
போயினர் எங்கோ குயவர்,
இலங்கை வேந்தன் இராவணப் பெயரான்,
போயினன் எல்லாம் விட்டு.

31. இன்றோ நாளையோ, சில நாள் சென்றோ,
காட்டில் கிடப்பாய்,
உன்மேல் நாளும் புல்லை மேய்ந்து மாடுகள் திரியும்.

32. நெய்வோன் முடிவில் துணியின் ஓரம் அடைவது போலே,
சாவோன் கணக்கும் இதுவேயாகும், இயன்றால் ஓடு!

33. சிறிதாம் நெஞ்சம் உள்ளான் முன்னே திறவாய் வாயை,
பெரிதாம் நெஞ்சம் உள்ளான் முன்னே திறப்பாய் உள்ளம்.

34. மண்ணும் காரையும் கொண்டே மாளிகை
ஏனோ சமைப்பாய்,
சாவெனும் பொல்லாள் செய்தி கேட்டால்
தகர்த்தே விடுவாள்.

35. வீணையின் இசையே நின்றதுவே,
அறுந்தன தந்திகள் யாவும்,
வீணையும் அந்தோ என் செய்யும்,
வைணிகன் சென்றே விட்டான்.

36. திருகை சுற்றக் கண்டு கபீரன் அழுவான் விக்கி,
இருகல் இடையே ஒன்றும் முழுதாய் எஞ்சுவதில்லை.
(திருகையின் இருகல் - விண்ணும் நிலமும் என்று பொருள் கூறப்படுகிறது.)

37. அறிவிலி மீன்காள், விரித்தான் வலையை மீனவன்,
சிறு குளத்துய்யீர், நாடுவீர் பெருங்கடல் தன்னை

38. பெருஞ்சுவர் எழுப்பி வீடு பெரிதாய்க் கட்டுவதேனோ,
மூன்றரை முழுமுன் வீடு, மிஞ்சில் கால் முழம் கூட.

39. முறையது முறையது வந்திட, பிரிந்தனர் பிரிந்தனர் பிரியர்,
உன்னுடைய முறையும் உயிரே, தினம் தினம் நெருங்கும்.

40. நீர்மேல் குமிழி நரர் தம் வாழ்க்கை,
பார்க்கையில் மறையும், காலை உடுப்போல்.

41. அழுதவர் இறந்தனர், எரித்தவர் மரித்தனர், பின்னர்
ஆ ஆ என்றவர் சென்றனர், அழைப்பேன் ஆரை!

42. முதுகுச் சுமையுடன் வழியில் நிற்பான் வழிப் போக்கன்,
வாய் பிளந்தெதிர்ப்பான் கூற்றுவன், வாழ்க்கை
எல்லாம் பொய்.

43. நம்மைப் பெற்றார் சென்றாரே, நாமும் போகலாயிற்றே,
நாமும் பெற்ற செல்வங்கள், மூட்டை கட்டி விட்டாரே!

44. இச்சகத்தில் ஒன்றுமில்லை, இனிப்பாகும் பின் புளிப்பாகும்,
நேற்று நாட்டை ஆண்டவர்,
இன்றோ காட்டை ஆள்வாரே!

45. மகன் பிறந்தாலென், முரசும் கொட்டுவதென்?
வரவும் போக்கும் எறும்பின் வரிசைபோல்.

46. இராமன் என்னும் பொருள் பெற்றாய்,
மூட்டை பிரித்தல் கபீரா வேண்டாம்,
சந்தை இல்லை, மதிப்பறிந்து கொள்வார் இல்லை,
விலையும் இல்லை.

47 காய்கறிச் சந்தையில் வைரம் விரிப்பது வேண்டாம்,
வாய் திறக்காமலே மூட்டை கட்டி வழி செல்வாய்.

48. செத்துச் செத்துச் செத்தது உலகம்,
சாகும் வழியோ அறிந்தாரில்லை.
செத்தான் தாசன் கபீரன், மீண்டும்
சாவது நேரும் இல்லா வழியில்.

49. கங்கையின் நீர் போல் கபீரின் நெஞ்சம் நிர்மலமாக,
கபீர் கபீர் என்றே அவன் பின் அரியும் கூவி யலைந்தான்.

50. சாகும் வழியே அறிந்தால், வாழ்வில் மேலாம் சாவே,
மரணம் வருமுன் மரிப்பார், மரணம் முதுமை வென்றார்.

51. மஞ்சள் கிழங்கின் வண்ணம் மஞ்சள்,
சுண்ணம் வெண்ணிறமாகும்,
அன்பர் சேர்கையில் அண்ணல் கூட,
வண்ணம் இரண்டும் நீங்கும்.

52. எல்லையில் செல்பவன் எளியன்,
எல்லை கடப்பவன் மேலோன்,
இரண்டும் கடந்தே அப்பால் உள்ளான்
மனமே ஆகாதம்.

53. இராமனைச் சொல்லி இறந்தான் இந்து,
முஸ்லீம் குதாவை அழைத்தே,
இருவர் தொடர்பும் விடுவான் எவனோ,
அவனே உயிருடன் வாழ்வான்.

54. காபா காசி ஆயிற்று, ராமன் ரகீம் ஆகிவிட்டான்,
குருணை மெல்லிய மாவாகி, கபீர் விருந்து துய்க்கின்றான்.

55. இதயத்தில் அமைதி இல்லாமல்,
ஹஜ் ஏன் செல்வீர் ஷேக்காரே,
இதயத்தில் நிறைவு மில்லாமல்,
குதாவைக் காண்பது எப்படியோ!

56. காசியில் வீடு கட்டுவீர்,
நிர்மல நீரைக் குடித்திடுவீர்,
அரியின் நாமம் இல்லாமல்,
முத்தியடைவது மில்லையே.

57. அய்யன்பால் மெய்மையும்,
அண்டையர்பால் தூய்மையும்
உண்டேல் பின் மொட்டையும் நீள்
சடையும் ஒன்றாகும்.

58. நாலு மாலை போட்டுக் கொண்டு
சாமியாராய் ஆனாலென்,
வெளிப்புறத்தில் வண்ணம் மினுக்க,
உள்ளே குப்பை கிடக்குமே!

59. மயிர் புரிந்த குற்றம் என்ன,
மீண்டும், மீண்டும் மழித்திடுவீர்,
பல விகாரம் மண்டி உள்ள
மனத்தை மொட்டை அடித்தாலென்?

60. எழுத்தும் அதுவே சொல்லும் அதுவே,
படிப்பர் மாந்தர் பலப்பலவாறே,
நயத்தை அதிலே சற்றே சேர்த்தால்,
அதுவே அமுதம் ஆக்கும் மருந்து.

61. நீரிலும் மென்மையன், புகையின்
புகைமை மிஞ்சியவன்,
காற்றிலும் வேகத்தன்,
அவனே கபீரின் உறுதுணைவன்.

62. பிச்சை உணவில் பல்வகை உண்டு, அதுவே மேலாம்
கேட்பாரில்லை, நீயே மன்னன் கபீரன் சொல்வான்!

63. கலக்கம் வேண்டாம், கவலை வேண்டாம்,
நம்பிரான் வல்லான்,
விலங்கு பூச்சி தமக்கே செல்வமும் உண்டோ?

64 இராமன் நாமம் நெஞ்சில் கலக்க,
இயமன் என்னை விட்டுச் சென்றான்,
நாயகன் தன்னை நம்பும் நானே,
நரகம் தன்னில் இடர் படமாட்டேன்.

65. பாட்டில் உள்ளது அழுகை,
அழுகையில் உள்ளது பாட்டு,
வீட்டைக் கட்டுவன் துறவி,
துறவதில் நிற்பன் வீட்டான்.

66. படிப்பது வேண்டாம், புத்தகத்தைத்
தூக்கிப் போடு, கபீரன் சொல்வான்,
ஐம்பத்திரண்டாம் அட்சரத்தில்
ரானா மானா இரண்டே ஓது.

67. பையப் பையப் போயின எல்லாம்,
செல்வர், செல்வம், காமினி, காமம்,
ஒன்றாய்க் கலந்தே ஒன்றாய் விட்டான்,
தாசன் கபீரன் இராமன் கூட...

Printed at Shivam Offset Press, Naraina, New Delhi-110028



வரலாற்றின் இடைக்காலத்தில் சமய மற்றும் சமூகப் பரிணாமங்களைத் தோற்றுவித்த மகான் களாகிய அடியார்களிலும் சீர்திருத்தவாதி களிலும் சாலச் சிறந்தோரில் கபீரும் ஒருவர். மெய்ஞானியான அவர், சடங்குச் சழக்குகளை உறுதியாக எதிர்த்தார். சடங்குகளிலும் சம்பிரதாயங்களிலும் உள்ள பாசாங்குகளையும் பகட்டையும் அம்பலப்படுத்தி அவற்றை உடைத்தெறிந்தார். இந்துக்களுக்கும் முஸ்லீம் களுக்கும் இடையே பாலமாய் விளங்கிய அவர், அந்தப் புரட்சிச் சகாப்தத்தின் புகழ்மிகு பக்தர்களில் ஒருவர். அவருடைய சிந்தனையும் போதனைகளும் கிட்டத்தட்ட நாடெங்கும் ஊடுருவி, சமயச் சீர்திருத்தத்துக்கு உதவின.

டாக்டர் பாரஸ்நாத் திவாரி, கபீரை ஆழ்ந்த பற்றுடன் ஆய்ந்திருப்பவர். கபீரின் வாழ்க்கை பற்றியும், படைப்புகள் பற்றியும் நிறைய ஆராய்ச்சி செய்திருக்கிறார். என்பிடி-யின் தேசிய வாழ்க்கை வரலாற்று நூல்வரிசைக்காக இந்நூலை ஆக்கியுள்ளார்.




ரூ. **25.00**

ISBN 978-81-237-2802-5

நேஷனல் புக் டிரஸ்ட், இந்தியா